கவிக்குயில் நிலையச் சுடர் 4

அன்பளிப்பு

# இயற்கையின் நடனம்.

தே. ப. பெருமாள்.



கவிக்குயில் நிலையம்,

கோட்டாறு :: தென் திருவிதாங்கூர்.



விற்பனை உரிமை:

ஸ்ரீமகள் கம்பெனி.

22, பிராட்வே, சென்னை.



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**




இந்தியா அச்சு நிலையம்,
நாகர்கோவில்.

1944

# பதிப்புரை.

இயற்கையின் நட்டனம் என்னும் இப்புத்தகம் கவிக்குயில் நிலயத்தின் நான்காவது வெளியீடாகும். இயற்கையன்னை வேளாவேளை ஒளியுடை மாற்றிப் புரியும் நட்டனங்களில் இதயம் பறிகொடுத்த இளங்கவிஞர் திரு. தே. ப. பெருமாள் அவர்களின் கவிதைத் தொகுதியே இந்நூல். கவிதைகள் எளிமையும், இனிமையும் நிறைந்து உணர்ச்சியை நல்கும் விதத்தில் உருவாகியிருக்கின்றன. தமிழன்னையின் பாதங்களில் இந்நூலை மகிழ்ச்சியுடன் அர்ப்பணிக்கின்றோம்.

கவிக்குயில் நிலயத்தார்.

# முன்னுரை.

"உள்ளத்தின் புண்ணையாற்றும் இயற்கையை விழியால் பார்ப்பதில் பயனில்லை. இயற்கையின் இதயத்தில் நாம் வாழ்வு நடத்தவேண்டும். இயற்கையின் ஆனந்த வெளியீடே உள்ளத்தின் இன்ப ஒலிப்பெருக்கு" என்று ஒரு மேலை நாட்டறிஞர் இயற்கையைப் பற்றியும், நாம் அதை அனுபவிக்க வேண்டும் விதத்தைப் பற்றியும் அழகாகச் சொல்லியிருக்கின்றார்.

ஆம், நாம் தினந்தோறும் காணும் ஒவ்வொரு இயற்கைப் பொருளும் எவ்வளவு அற்புதமானது! இவைகள் தம்முள் எவ்வளவோ ரகசியங்களை அடக்கி வைத்திருக்கின்றன. நாம் அவற்றோடு ஒன்றி சிந்தனையில் கலக்கும் போதுதான் இவைகளின் மகத்வ பூர்ணமான சக்தியும், இயல்பும் வெளியாகின்றன. வாழ்வின் பரிபூர்ணமான பாடத்தை-நிரந்தரமான உண்மையை நாம் இயற்கையின் மூலம் அடையலாம்.

இயற்கையுடன் கிரேக்கர் மிகவும் ஒன்றிவாழ்ந்து உயர்ந்த கலைப்பண்பும், சிறந்த வாழ்க்கை இன்பமும் பெற்றிருந்தார்கள். இதற்குத் தமிழர்கள் விலக்கல்ல. சொல்லப் போனால் கிரேக்கரை விடவும் கொஞ்சம் மேலாகவே தமிழர்கள் இயற்கையுடன்—அழகுடன் ஒன்றி வாழ்ந்து வந்தார்கள். எத்தனையோ நூற்றுக்கணக்கான வருடங்கட்குமுன் அவர்கள் இயற்கையினைப் பற்றி வெளியிட்ட கருத்துக்கள் இன்றும் நமக்குப் பிரமிப்பை நல்குகின்றன. இயற்கையையே மேலான சக்தியாகக் கூறி அதற்கு அவர்கள் வணக்கம் செலுத்தி வந்தார்கள்.

இந்த நூலுள், யான் பலப்போது இயற்கையன்னையின் முந்தியிலமர்ந்து ஆனந்த வெறியில் பாடிய பாடல்கள் பல இடம் பெற்றிருக்கின்றன. இதோடு இதில்சில நாட்டுப் பாடல்களும் சேர்ந்திருக்கின்றன. தமிழ்மக்கட்கு இந்நூலால் சிறிதாவது பயன் கிடைக்குமானால் அதுவே எனக்குப்பெரிய ஆனந்தமாகும். தமிழர்கட்கு இதை மனமுவந்தளிக்கிறேன்.

தே. ப. பெருமாள்.

# பொருளடக்கம்

## இயற்கையின் நடனம்

எண் பக்கம்

# இதயத் துடிப்பு





## இந்நூலாசிரியர் எழுதிய நூற்கள்:-

தமிழ்ச் சுனை

இயற்கையின் நடனம்

## விரைவில் வெளிவரும் நூற்கள்:-

இன்பவசந்தம் (கட்டுரைகள்)

சிற்பத்தின் சக்தி (கதைகள்)

குழந்தையரங்கு (கவிதைகள்)

வாடாமலர்கள் (விமர்சனம்)

வஞ்சிநாட்டுக் கலைஞர்கள்

# இயற்கையின் நடனம்

## 1. காலக்கடல்

காலம் என்னும் கனைகடலே!
கழியும் வருடத் திரையுடையாய்!
வேலைக் குள்ள கரையேனும்
விளங்க இல்லாப் பெரியோயே!
ஓலத் துன்ப உன்றன்நீர்
உலக மக்கள் கண்ணீரில்
சாலக் கலந்த உப்போடு
சார்ந்த கைப்பைத் தந்திடுமே!

நீளப் பெருகிய நிலையோயே!
நிறைவில், உனது நற்சூழ்வில்,
ஆளும் சாவின் எல்லையினை
அணித்தே யடைய ஆர்ந்திடுவாய்
வேளை வேளை சலித்திடுவாய்!
வேண்டு மென்றே ஒலித்திடுவாய்!
மீளும் சிதறல் யாவையுமே
மீண்டு மக்கரை சிந்திடுவாய்!

அமைதி போல அமைந்திடுவாய்
அதிலே வஞ்சம் வைத்திடுவாய்
குமையும் ஆர்ப்பைக் கொண்டிடுவாய்!
கொடுமை கூட்டே கூட்டிடுவாய்!
எமையே ஆளும் பெரியோயே!
எதிரில் காலப் பெருங்கடலே
அமையும் சொல்லைக் கூறுகின்றேன்
அடைவா ருன்னை யாரேகாண்!

இது ஆங்கிலக்கவி ஷெல்லி எழுதிய Time என்னும் கவிதையைத் தழுவியது.

## 2. உதயம்

ஆதவனும் கீழ்த்திசையில் தோன்றி விட்டான்;
 ஆகா!இவ் வுலகமெல்லாம் அழகின் சோதி!
சீதமிகும் சோலையினில் தென்றல் வீசும்;
 செம்மலர்கள் முகந்திறந்தே தேனைச் சிந்தும்;
மோதிவிழும் வண்டுகளும் முழக்கும் பண்ணை;
 மூக்கினிலே மகரந்த வாசம் வீசும்;
கீதமெல்லாம் குயிலுக்கே; கிளிகள் பேசும்;
 கிளையிடையே தாவுகின்ற கதிரைக் கண்டே!

ஆழியுமே பொன்னுருக்கி யார்த்த தங்கே;
 அழகான நதியெல்லாம் கதிரோன் பிம்பம்
சூழுகின்ற பொய்கையினில் விரிந்த பூக்கள்
 சுந்தரியாம் காதலியின் தோற்றம் காட்டும்;
தாழுகின்ற கதிர்க்குலையில் தங்க முத்தாம்!
 தங்குகின்ற பனித்துளிகள் தாளக் காட்சி;
தோழியுடன் மங்கையர்கள் சொக்கி நிற்பார்
 சூரியனும் எழுகின்ற தோற்றம் கண்டே!

உலகத்தின் இருளெல்லாம் ஒளித்தேவன் கொன்றுன்;
 உயிரினங்கள் உறக்கத்தை ஒழித்ததனைக் காண்பாய்!
விலகியதே சோம்பலெல்லாம்; விளங்கியது முயற்சி;
 விருவிருப்பாய் நடக்கின்ற தொழிலினது வேகம்;
இலங்கியது நல்லறிவாம்; ஏமாற்றம் இல்லை;
 இதயத்துள் ஆனந்த இன்பநதி வெள்ளம்!
கலையினது நல்லாக்கம்; கவிதைவளம் பொங்கும்;
 கதிர்வேலன் காட்சியினைக் கண்டுவிட்டோ மிங்கே!

## 3. காலைக்கன்னி

தாரகைச் சேலையைத் தரித்த ராவும்
　　தாவியே சென்றதுவே - இங்கு
காரிருள் நீக்கிக் காலைக் கன்னியும்
　　கடுகி வந்தனளே!

கங்குல் பொழுதினில் கலங்கிப் பூமகள்
　　கண்ணீர் வடித்திடவே - இவள்
அங்கம் குளிரவே யன்புத் தென்றல்
　　அமைய வீசினளே!

இரவில் விழித்தே இளைத்த சந்திரன்
　　இன்னல் முகத்தினையே - இவள்
கரவில் கண்டு களிப்பு கொண்டு
　　கவினைக் கொட்டினளே!

பூம்பொழில் மொட்டுகள் பூத்து நிறைந்திடப்
　　பொன்னொளிப் போர்வையினை - இவள்
நாமம் விளங்கிட நன்மணம் பொங்கிட
　　நன்கு விரித்தனளே!

பொய்கை விரித்தே புள்ளின மெழுப்பிப்
　　பூரிப்பைக் கூட்டினளே - இவள்
செய்கை நலம்பெறச் செகத்தைத் தூண்டியே
　　செம்மை பெருக்கினளே!

# 4. மலர்

மலரே! நீயும் என்னேடு
மகிழ்ந்தே யாட வாராயோ?
உலேவு கொண்ட உள்ளத்தில்
ஊக்க மூட்ட வல்லாயே!

உன்றன் முகையி லுறக்கஞ்செய்
உயர்ந்த நல்ல வாசத்தால்
என்றன் உள்ளம் இன்படைய
எழிலார் முகமுந் திறவாயோ?

விண்ணில் தோன்றிய வெண்ணிலாவால்
விளங்கு முகத்தைக் கழுவியதால்
மண்ணில் நீயும் எங்களேயே
மயக்கும் சக்தி பெற்ருயோ?

காலேக் கதிரோ னெளியாலே
கவினும் மகிழ்வும் பெற்றுப்பின்
மாலே நீயும் வருந்துவதால்
மாற்றம் உலகில் அறியாயோ?

மந்த இனிய மாருதமும்
மாண்புக் கதையைக் கூறிடவே
சிந்தை மகிழ்ந்து கேட்டுப்பின்
சீரில் நின்றே யாடுவையே!

பிறரின் இன்ப வாழ்விற்குப்
பிறந்த அழகுப் பெரியோயே!
சிறந்த அந்தத் தொண்டுக்கே
செகத்தில் உயிரை விடுவாயே!

# 5. தாமரைப் பெண்

பூவில் சிறந்த தாமரையே!
புன்னகைக் காட்டில் தோன்றியதால்
காவில் மலர்ந்த பூவினும்நீ
கவினை யதிகம் பெற்றுயோ?
மேவும் தும்பி உன்னிடையே
மேள தாளம் செய்வதுடன்
பாவின் இசையைத் தந்திடுமே!
பண்ணை யெல்லாம் கொட்டிடுமே!

தாரகை யென்ற முத்தினையும்,
சந்த மேக நல்லுடையும்,
பாரில் சிறந்த உன்றனுக்கே
பாமும் காதல் வேட்கையிலே
நேரில் சந்திரன் தரவந்தும்
நிமிரா நிலையைப் பெற்றுயே!
ஊரில் உன்புகழ் பெரிதேயாம்
உத்தமக் குலத்துப் பூமகளே!

இரவுப் பொழுதில் இந்துவுமே
இன்ன லுனக்கு நல்கியதால்
சுரப்பாய் கண்ணீர்ப் பெருக்கினையே!
சோதிக் கதிரோன் காலையினில்
விரைவா யுன்னைக் கண்ணுற்றே
வேண்டும் இன்பம் தருவதுடன்
பெருகும் பனியாம் விழிநீரைப்
பொன்பூங் கரத்தால் போக்குவனே!

உன்றன் எழிலைக் கண்ணுற்றே
உயர்ந்த கவிகள் கற்பனையில்
உன்றன் பக்கம் தெய்வத்தை
ஒட்டி வைக்கத் துணிந்தனரோ?
உன்றன் மாண்பைப் புகழ்ந்தேதான்
உருக்கு மிசையில் குயில்பாடும்
உன்றன் பிறப்பால் உன்னிருக்கை
ஒப்பில் நிலையைப் பெற்றதுவே!

# 6. ரோஜா

உலகத்தின் பசுமையெல்லாம்
ஒன்ருகச் சேர்ந்ததினுல்
உலேவகற்றும் இதழ்களுடன்
உருவாகி வந்தாயோ?

மனதிலெழும் கற்பனேகள்
மாயாமல் உன்னுருவாய்ப்
புனிதத்தைப் பெற்றதுவோ?
புகழெல்லாம் கொண்டதுவோ?

என்னுழைப்பின் ஏற்றமெல்லாம்
இங்கேயுன் செவ்வுடலில்
நன்மணத்தை வீசிடுமோ?
நறவெல்லாம் கொட்டிடுமோ?

காலேயிலே கவலேனத்தும்
கடிதினிலே மாற்றுதற்குச்
சோலேயிலே பூவாகிச்
சுந்தரமே! வந்தாயோ?

கொடுங்காற்றிங் குலேயண்டிக்
கொடுமைசெயும் வேளேயிலே
நெடுமூச்சை விட்டிடுவேன்
நெஞ்சுதுன்பால் நொந்திடுமே!

தென்றலுடன் நீகொஞ்சிச்
சிரிகொள்ளும் வேளையிலே
என்றனுள்ளில் காதலென்னும்
இன்பவெறி பொங்குமடி.

உன்னுடைய மாதாவாம்
ஒளிச்செடியின் இளமையினை
என்முன்னே காட்டிட்டவே
இவ்வெறிலைப் பெற்ருயோ?

முள்ளென்னும் காவலகம்
முன்கருதி உனைவைத்தும்
கள்ளன்கரு வண்டுடனே
கலப்பதுவும் நன்ருமோ?

வாழ்க்கை சிறிதெனினும்
வாழுங்கால் இன்பத்தில்
மூழ்கும் நிலைபெற்ருய்!
மூவாமை பெற்ருயே!

# 7. காவின் மலர்

ஒருநாட் காலை உயர்பூங் காவை
மருவி நடந்தேன்; மகிழ்வில் மலர்ந்த
கடிமல ரொன்று கண்டெனில் கூறும்
"அடிமை மகனே! ஆண்மை இழந்தோய்!
உனது வாழ்வும் வாழ்வில் சேர்மோ?
உனக்கும் இன்பம் உண்மை யிலுண்டோ?
வீர மில்லா வெற்றுடல் பெற்றுய்!
பாரி லிழிவுப் பட்டம் பெற்றுய்!
பெற்ற நாட்டின் பேற்றை யிழந்தும்
முற்றிய மகிழ்வில் மூழ்கி வாழ்குவை
ஆயின் என்னிலை ஆய்ந்து நோக்கின்
நீயும் என்னை நெடுகப் புகழுவை!
என்னை யாரும் இழிவு படுத்திடில்
உன்னி வருந்தி உணங்கி வாடுவன்;
பொறுக்க இயலாப் பேரிழி வாகிடில்
கறையில் உயிரைக் கடிதில் விடுவன்;
எனினும் உனைப்போல் இழிவில் வாழேன்!
உனையே வேண்டுவன் உவந்திது செய்வாய்!
என்னை யண்டா திருத்தல் வேண்டும்
என்னை விரும்பா தேகுதி யப்பால்
இன்னே செல்வாய்! இழிந்த உன்னிழல்
என்னில் படுமேல் யான்மா சுறுவன்"
என்றே யம்மலர் எனையோட் டியதே!

---

# 8. சோலைக் காட்சி

மாலைத் தென்றல் வீசிடவே
மதுவைச் சிந்தும் சோலையகம்
கோலம் காணச் சென்றிட்டேன்
குயில்கள் இசையால் கூவியெனைச்
'சீலா வாவா' என்றழைக்கும்;
சிந்தை குளிரத் தேன்வண்டு
நீலாம் புரியாம் பண்ணமுதை
நீட்டி வரவு சொல்லிடுமே!

பசுமை கொட்டும் செடிப்பெண்கள்
பசட்டும் வர்ண மலர்ப்புள்ளி
மசிய வைக்கும் சேலையினை
மகிழ்ந்து கட்டிக் கொலுவமர,
அசையும் மௌனப் பூந்தென்றல்
ஆடை களைந்து மலரெல்லாம்
திசைகள் வீசும்; புல்லுடைகொள்
நிலமாம் தேவிக் கீந்திடுமே!

பருவம் எய்திய இளமரங்கள்
பக்கம் நிற்கும் பூங்கொடியை
மருவ விழைந்து கிளைக்கையால்
மைய லூட்டி யழைத்திடவே,
உருவம் திருத்தி ஒளிபாய்ச்சி
உள்ளம் குளிர்ந்து பூங்கொத்தைச்
சொரியும் கொடியும் நற்றுணையைத்
தொட்டுக் கொஞ்சி யணைத்திடுமே!

உதிர்ந்த சருகாம் மெத்தையின்மேல்
உறங்கும் மோகனத் தண்ணிழலும்
பதியை இழந்து தவிக்கின்ற
பத்தினிப் பெண்ணைப் போன்றதுவாம்!
மிதியை நல்கி வருத்திடினும்
மேன்மை யென்றும் குறையாது
கொதித்து வருவோர் தமையேற்றுக்
குளிர்ந்த இருக்கை நல்கிடுமாம்!

ஏழை யென்றும் எப்பொழுதும்
இரந்தே யுண்டு வாழ்வதுபோல்
ஆழ்த்தும் துயரக் காட்சியினை
அண்டி யானும் கண்டிட்டேன்!
தாழ்ந்து நிழலும் கைநீட்டித்
'தருக பிச்சை' என்பதுபோல்
சூழ்ந்து வந்திடும் நிலைமையினில்
துக்கம் மிகவும் துய்த்தேனே!

கருமை கக்கும் முகிலிடையே
கரந்து பார்க்கும் இளமதிபோல்,
அருமைப் பின்னல் முக்காட்டை
அகற்றி நோக்கும் கன்னியென,
நிரையார் பசுமை இலைகளிடை
கழுத்தை நீட்டி வையத்தில்
உரைசெய் முகையைக் கண்டேனே!
உள்ளம் திருந்தி நின்றேனே!

இளமை என்னும் மின்னலிலே
எழும்பும் இன்ப ஒளிக்கனவு;
வளமை; அழகின் மதுக்கலசம்;
வளர்ச்சி; பறக்கும் காதல்தேர்;
திளைக்கும் கற்பனைச் சுவையுள்ளம்,
தேயா உறுதி, நம்பிக்கை
விளையப் பெற்று வந்ததனை
விரித்தே யம்முகை செப்பியதே!

"தென்றல் வந்து கொஞ்சுகையில்
சிந்தை திறந்து மணமீவேன்!
இன்ப வண்டு நண்ணியதும்
இனிய மதுவை நல்கிடுவேன்!
சின்னஞ் சிறுவர் கூவிடவே
சேர்ந்தே யவரைக் களிப்பிப்பேன்!
கன்னி யென்னை யழைத்திடவே
காதல் பெருக்கச் செல்வேனே!

வாழும் இந்த வாழ்வினிலே
வையம் மகிழ வாழ்ந்திடுவேன்!
தாழ்வை யென்றும் கண்டறியேன்!
தகைமை கணமும் மறந்தறியேன்!
சூழ்வோர் தம்மைப் புன்முறுவல்
துலக்கி யானும் வரவேற்பேன்!
வீழும் அந்திம வேளையிலே
வெற்றிச் சாவை யணைவேனே!"



என்றே முகையும் இயம்பியதை
இதய அறையில் நன்கெழுதி
நின்றேன் யானும் நெடுநேரம்
நினைவுப் புயலில் சிக்குற்றே!
நின்ற எனது முன்னேயே
நில்லாக் காலம் பொன்னொளியைக்
குன்ற வைத்தே இரவென்னும்
கோட்டை வாசல் திறந்ததுவே!

முற்றி விளைந்த சோளத்தின்
முத்துக் கொண்டை எனவானில்
சுற்றி எழுந்தன தாரகைகள்;
சுந்தரக் கிணற்றை ஒத்திடவே
சுற்றை வெண்மதி ஒளிப்புனலைக்
காதம் காதம் பாய்ச்சுகின்ற
பிற்றைப் போதில் இல்வந்தேன்
பெற்ற இன்பம் சொல்லிற்கோ?

---

## 9. குயில்

பசிய சோலைத் தணுப்பெல்லாம்
பருகி நீயும் வாழ்வதினுல்
இசைக்கும் கீத இன்பத்தால்
இதயம் குளிர வைப்பாயோ?

வானத் தாயின் நல்லன்பை
வழங்கு முனது செய்கையினுல்
ஊனும் சிறுகி உன்னுேடே
உயரப் பறக்க இசைவோமே!

கதிரோன் மேற்கில் ஒளித்தேகக்
கருமைத் தேவி விளையாட
இதயக் காதலி நினைவெல்லாம்
எழிலார் கிளையிருந் தூட்டுவையே!

அருணன் கதிரால் சீர்கொள்ளும்
அழகுக் கமலச் சிறுகன்னி
உருகி உன்னை யழைத்திடவே
உயரப் பறந்தெங் கேகுவையோ?

சீதச் சுனையின் தண்ணீரும்
சிறந்த காதல் நல்மதுவும்
கீதக் குயிலே! உன்னிசையில்
கிடைக்கும் இன்பம் நல்கிடுமோ?

வசந்த காலம் வந்ததுமே
வாச மலர்கள் முகங்காட்ட
இசையாம் கீத மழையாலே
என்னில் சக்தி ஏற்றுவையே!

வானப் பாதையில் என்னையுமே
வடிவக் குயிலே! அழைத்தேகி
இனக் கவலையை மாற்ருயோ?
இன்ப மயக்கில் பாடுவனே!

தமிழைக் கற்கும் போதினிலே
சந்தக் குயிலே! என்னுணர்வில்
அமுதந் துய்ப்பேன்; அருகினிலே
ஆடி நீநடம் புரிவாயே!

வறுமைத் தீமைக் கட்டுடனே
வரட்டும் வஞ்சம் மாய்ந்தேகப்
பொறுமை யன்புச் சாந்தமெல்லாம்
பொங்கி வழியப் பாடுவையே!

கடமை மறந்தோன் உள்ளத்தின்
கதியை மாற்றி உரிமையினைத்
திடமாய் ஊட்டித் தேசத்தின்
சேமங் காணச் செய்வாயே!

---

## 10. வானம்பாடி

மேகத் திடையே சந்திரனுய்,
    மினுங்கும் தாரகை போன்ருயே!
ஏக மாக விற்றிருந்தே
    எண்ணுங் கவிஞன் இசையமுதாய்ப்,
போகம் நல்கும் பூங்காவில்
    பொங்கும் நல்லிசை வண்டென்னத்,
தாகம் தீர இசைகொட்டும்
    தங்கப் புள்ளே! வாராயோ?

பசிய சோலைப் பழனங்கள்;
    பாடும் நதிகள்; தண்சுனைகள்;
இசைக்கும் கடல்கள்; வான்மலைகள்
    இவற்றி னெழிலாம் மதுவுண்டுத்
திசைகள் சுற்றிச் சுதந்திரமாம்
    தேரி லேறிக் காலத்தின்
நசையைப் போக்கி வாழ்வாயே!
    நாதக் கடலில் சேர்ப்பாயே!

களையைப் பிடுங்கும் கன்னியர்கள்
    கலங்கித் தெளிந்த தண்ணீரில்
தெளிவாய்த் தம்முக விலாசத்தைச்
    சிந்தை மகிழக் கண்டங்கு
வெளியே சென்ற காதலற்கு
    விருப்பாய்க் காட்ட எண்ணுதலை
ஒலியா துரைத்தே வானத்தில்
    ஒலியைப் பெருக்கும் இசையமுதே!

உதயப் பொன்னொளி வையத்தில்
உருகிப் பாயும் வேளையிலே
இதயம் பொழியும் இசையமுதை
இன்பத் தென்றல் கன்னிக்குக்
கதியை நல்க நீயீந்துக்
கருணை பெருக்கிப் பறப்பாயே!
விதியைத் தாண்டும் மதிபெற்று
விண்ணை நோக்கிச் செல்வாயே!

உன்னைக் காணும் போதினிலே
உள்ளில் காதல் வெறிபொங்கி
என்னை மேலே இழுத்தேகும்
இன்ப அருவி இசைப்புள்ளே!
மன்னும் கவலை மாய்ந்திடவே
மதுவின் சுவையில் முங்கிடவே
என்னை இன்ப லோகத்தில்
ஏற்றி இழுத்துச் செல்வாயே!

---

# 11. மேகம்

வானகத்தில் வந்துபல
வடிவு காட்டுவோம்! - பச்சைக்
கானகத்தைக் கண்டிறங்கிக்
கருணை கொட்டுவோம்!

ஆட்டுமந்தை போவதுபோல்
ஆர்ந்தே யோடுவோம்!- வெய்யக்
காட்டுயானைக் கூட்டமொப்பக்
கலங்கிக் கூடுவோம்!

வெள்ளிமலை செல்லுவதும்
விளங்க வைப்போமே!- ஆழி
உள்ளோடும் நீர்மூழ்கி
உருவை யொப்போமே!

மயில்நட்னம் விரும்பிநாங்கள்
மாற்றம் காட்டுவோம் - இன்பக்
குயிலிசையைக் கேட்கவேண்டிக்
கூத்தும் கொள்ளுவோம்!

பச்சைப்பயிர் தலையசைக்கப்
பாட்டுப் பாடுவோம்! - மலர்
நச்சியெம்மை முறுவலிக்க
நலிவைப் போக்குவோம்!

மலையரசன் தழுவியெம்மை
　　மகிழும் வேளையில் - அன்பால்
விலைமதியா முடியவர்க்கு
　　விளங்கச் சூட்டுவோம்!

காதலர்கள் தாபத்தில்
　　கடுகும் வேளையில் - அங்கு
பாதகமாய் வந்திவரைப்
　　பதைக்கச் செய்குவோம்!

மழையாக மாநிலத்தில்
　　மாற்றுருப் பெற்றே - உயிர்
தழைக்கின்ற தருமமதைத்
　　தங்கிச் செய்குவோம்!

---

# 12. குழந்தை

இதயக் காவில் பூத்துதிரும்
இனிய ஆசை வடிவாக
உதித்து வந்த ஆரமுதே!
ஒளிரும் சோதிப் பெருங்கடலே!

உனது விழியாம் அருட்பெருக்கில்
உலகத் துன்ப மத்தனையும்
கனவு போல மறைந்திடுமே!
கவலை யாவும் மாய்ந்திடுமே!

இருண்ட எங்கள் இல்லத்தின்
இயல்பை மாற்றும் சுடரொளியே!
அருண்ட எங்கள் வதனத்தில்
அழகை ஏற்றும் கதிர்மணியே!

உனது நாத மணிக்குரலால்
உயர்வே இல்லா எங்குடிசை
புனித இன்ப இசையரங்காய்ப்
பொருந்திக் கலகல என்றிடுமே!

வறண்ட எங்கள் வாழ்வினிலே
வளமை நல்கும் வான்புயலே!
கறக்கி யெம்மை அழிதுயர்கள்
கணமும் உன்னைத் தீண்டற்க!

காவில் மலர்ந்த ரோஜாவும்
கனிந்து பாடும் பூங்குயிலும்
நாவில் சிறந்த கிளியுமுனை
நயந்தே யழைக்கும் விளையாட!

எம்மை நோக்கி வருங்காலம்
இன்பாய்க் கழிக்க உன்னையுமே
நம்பி யாங்கள் வாழ்ந்திடுவோம்!
நம்பிக் கையின் பூஞ்செடியே!

எங்கள் தளர்வும் கொடுமுதிர்வும்
எழிலே! உன்னைக் கண்டதுமே
எங்கோ சென்று போயினவே!
இனியும் எம்மை எட்டிடுமோ?

மூடப் பழக்க வழக்கத்தை
முறிய டித்தே கவிபாடி
நீடு பயனைத் தருகின்ற
நித்திலக் கவியாய் வந்திடுக!

கோழை மக்கள் உள்ளத்தில்
குறியாய் வீரம் ஏற்றுகின்ற
பாரில் வாசக நாவலனாய்
பைங்கிளி யே!நீ பயன்படுக!

அறிவை வளர்க்கும் கலையினையே
அழகு வாழ்வின் சித்திரமாய்ச்
செறியும் இன்பில் தருகின்ற
சிறந்த கலைஞனாய் வந்திடுக!

அடிமை வாழ்வில் நைந்துநகி
ஆக்க மிழந்த பாரதத்தைத்
திடத்தைப் பெற்றே முன்னேற்றும்
தேசத் தொண்ட னாகிடுவாய்!

---

## 13. வான வில்

வானகத்தில் இயற்கைத்தாய் வைத்துவிட்டுப் போன
வர்ணநிறை நிகரில்லா வடிவுடைய வில்லோ?
ஊனகமும் குளிர்ந்திடவே ஓங்கிவரும் மாரி
உயர்வரவைக் காட்டிடவே ஒட்டிவைத்த குறியோ?

இயற்கையெனும் பராசக்தி எழிலெல்லாம் கூட்டி
எழுதுகின்ற கோலத்திற் கேற்றியிட்ட வரியோ?
மயலூட்டும் வானரசி மண்ணகத்தில் வந்து
மதிப்படையத் தச்சனும்நிர் மாணித்த வழியோ?

வானகமாம் காவினிலே வனப்பெல்லாம் கொட்டி
வண்மலரைச் சிந்திடவே வந்தசைபூங் கொடியோ?
கானகத்தின் பசுமையெனக் காட்சிதரும் வானில்
கண்சிமிட்டிப் பாய்கின்ற மின்னதியோ? புனலோ?

ஆகாயம் மேவியெழும் அழகுநிறை புட்கள்
அத்தனையும் தடுத்தனுப்ப ஆக்கியநல் சுவரோ?
ஏகாந்த மாயிருந்தே இன்குயில்கள் செப்பும்
இசைகேட்க இறைவனுமே எடுத்தாண்ட வழியோ?

புயல்கண்டு தோகைவிரி பொன்னிறத்து மயில்கள்
போட்டியிட்டே நிறங்காட்டப் புரிந்தஇறைச் செயலோ?
வெயிலிரவி மலரணிந்த விண்ணகத்தின் தேவி
வெற்றியுடன் பின்னிவிட்ட விளக்கமுடைச் சடையோ?

ஆதவனுக் கெதிராக அகிலமெலாம் போற்ற
அரியஇடம் பெற்றுளிரும் அழகியவான் வில்லே!
சீதமிசை ஒளிபரவச் சேருகின்ற நிறத்தில்
செவ்வுருவைப் பெற்றுயோ? சித்தமிசைந்(து) உரையே!

# 14. மாலை

பாலை வெய்ய பூமியினில்
பருகும் நீரின் வேட்கையினுல்
நாலு திசையும் சுற்றிமகன்
நல்ல ஊற்றைக் கண்டதுபோல்
வேலை யொத்த வெங்கதிரால்
வெந்த உயிர்கள் பொழுதோட்டி
மாலைப் பொழுதைக் கண்டனவே!
மட்டில் இன்பம் கொண்டனவே!

நிலவு சிதறும் அழகோடு
நிகரில் காலைக் காட்சியையும்
உலவுங் கதிரோ னென்றுக்கி
உயர்ந்த மாலைக் கீந்தானே?
பலவுங் கொண்டே வையத்தைப்
பகராத் துன்பம் என்போரின்
நலிவு போக்க இயற்கையுமே
நல்கும் வான அமுதமிதோ?

இறையோன் இன்ப உருவினையே
இந்த உலக மக்களெல்லாம்
முறையில் கண்டு மகிழ்ந்திடவே
முருகா மிதுவும் வந்ததுவோ?
பறையர் பள்ளர் மேலோர்க்கும்
படியும் காட்சி ஒன்றென்றும்
இறையின் பொதுவைக் காட்டிடவே
இயங்கி வந்த ஓவியமோ?

சின்னஞ் சிறிய பிள்ளையர்பால்
செய்யோன் வெம்மை வீசியதால்
பின்னர் அவரும் தம்மியல்பைப்
பேசுங் கவிக ளாகிடுவார்,
உன்னித் தமது வெம்மையினை
உணரோ வியஞ்செய் திடுவரென
மன்னும் உணர்வா லன்றோக்கிம்
மாண்பைப் பகலோ னீந்தானோ?

பொன்னில் திகழும் கதிரோனின்
போற்று மழகைப் பெற்றேதான்
சின்னக் கூட்டி லமைவுற்றுச்
சிறக்கும் பறவை நிலையினையே
உன்னி யுன்னி உணருங்கால்
உயர்ந்த கவிகள் கற்பனையில்
மன்னி யிருக்கும் காட்சியதின்
மாசில் நினைவைத் தந்திடுமே!

மேவும் மாலைக் கதிர்க்கோமான்
மேன்மை யரங்கம் கண்ணுற்றுக்
காவை நோக்கி விரைந்துவரும்
கவினுர் பறவை இனமெல்லாம்
தேவர் வீசி விளையாடும்
சிறந்த அழகுத் தேன்மலர்கள்
பூவை நோக்கிச் சாய்வனபோல்
பொருந்துந் தோற்றம் தருவனவே!

பெற்ற நாட்டின் உரிமையினைப்
பெற்றே உவக்கும் வீரரைப்போல்
முற்றும் மகிழ்வால் ஓடிவரும்
முறையே திரும்பும் ஆனிரைகள்
சுற்றி யிருக்கும் பறவையெலாம்
சுடரோன் செய்யுங் கூத்தென்றே
தெற்றி யெண்ண மணியார்த்துத்
தெய்வச் செருக்கைத் தெரித்திடுமே!

---

# 15. இரவு

ஆதவன் மேற்றிசைச் சாய்ந்தானடி - புட்கள்
அத்தனையும் கூடு மேவுதடி
சீதமாய்த் தென்றல் உலவுதடி - வயல்
சென்ற உழவரும் வந்தாரடி.

வானமென்னும் நீலக் காவினிலே - மதி
வண்ண மலராகப் பூத்ததடி
தானுக வந்த இரவுகண்டே - யது
தன்னை மறந்து நகைக்குதடி.

தாரகை மொட்டுகள் தோன்றுதடி - வானும்
தண்ணில வாலொளி பெற்றதடி.
மாரனும் வில்லை வளைத்தானடி - மண்ணில்
மையலை ஊட்டி எழுந்தானடி.

ஆடும் மலர்கள் அரும்புகளில் - சாந்தி
ஆனந்த ஆசி பொழியுதடி
வாடிய மக்களின் நெஞ்சகத்தில் - அதுவும்
வாழ்த்தினை யள்ளிச் சொரியுதடி.

துன்பினில் தோய்ந்த உயிர்களுக்கே - யது
தூய துயிலைக் கொடுக்குதடி
இன்பக் கனவை எழுப்புதடி - வாழ்வில்
ஏற்ற அமைதி பெருக்குதடி.

---

## 16. தாரகை

ஆதவனும் கடல்வீழ
அதில்தெறித்த நீர்த்துளிகள்
ஓதுதற்கு நல்லெழுத்தாய்
உயர்வானில் தோன்றினவோ?

பகல்தேவி பரிந்தணிந்த
பைம்பொன்மணிக் கோர்வையினை
இகலிரவும் இழுத்தறுத்தே
இவ்வண்ணம் சிதறினதோ?

வானகமாம் தட்டடைந்து
வையகத்தின் எழில்நோக்கும்
மானனைய வான்மகளிர்
மலர்ச்சிரியோ? ஒளிக்கண்ணோ?

ஆகாயத் தடத்தில்நீர்
ஆடவந்த சந்திரர்க்கு
நோகாமல் பொழுதேக
நொடிசெய்யுந் தோழியரோ?

நிதிகாணும் ஆசையினல்
நினைந்துருகும் வறியோர்க்கிங்(கு)
இதுகாண வைத்ததுவும்
ஏக்கத்தைத் தீர்த்திடவோ?

வண்ணங்கள் பலகாட்டும்
வான்மலரைச் சிந்தியதும்
எண்ணத்தின் பெருக்காலெம்
இதயச்சுடர் தூண்டிடவோ?

---

# 17. இளம் பிறை

மின்னொளி ஓவியமே - கங்குல்
மேடையின் இன்சுடரே!
உன்னையே காணுகையில் - காதல்
உள்ளத்தில் பொங்குமடி.

பெண்ணின் எழிலோநீ - மதலை
பேசும் குரலினிவோ?
உண்ணும் கனிச்சுவையோ? - தேனில்
ஊறிய கண்டினிவோ?

இன்பக் குமுதமுமே - உன்னை
ஏறிட்டுப் பார்த்திடவே
வன்ம முகிலிடையே - நீயும்
மறைந்து கொள்வதேனோ?

உள்ளக் கடலினிலே - உன்றன்
உணர்வுப் பூந்திரைகள்
அள்ளிக் குவித்திடுமே - கவிதை
அழகு நித்திலத்தை

தாரகை முத்துகளும் - வானத்
தட்டெலாம் சிந்தியதால்
நேரினில் கண்டெடுக்க - நீயும்
நேர்மையாய் வந்தனையோ?

எண்ணிடும் கற்பனைகள் - உள்ளம்
ஈர்த்திடும் தீங்கனவு
பண்ணியே எம்முயிரை - வாழ்வுப்
பாதையில் போக்குவையே!

---

# 18. நிலவு

உலக மெங்கும் கதிர்வீசி
உயர்ந்த அழகில் வருமதியே!
இலங்கும் நின்றன் எழிலுருவில்
இயங்கும் புதுமை கண்டிடுவோம்!
பலவாம் ஆடல் புரிவதொடு
பாட்டுப் பாடி மகிழ்ந்திடுவோம்?
நிலவாம் நின்றன் நல்லொளியில்
நின்று பேசிக் களித்திடுவோம்!

வானம் சுற்றி வந்ததினுல்
வண்ண உடலம் வதங்கிடவே
தானும் அதையே பின்னறிந்து
தக்க முறையில் வளர்த்தோயே!
கானும், பொழிலும், கவின்நதியும்
கனைநற் கடலும், மாமலையில்
ஊனம் நீங்கிய உயர்சுனையும்
உன்னெளி கண்டே உவந்தனவே!

உலகத் தேவன் மின்னெளியை
ஒன்ருய்த் திரட்டிப் பந்தாக்கித்
தலைவி முன்னர் உருட்டிடவே
தண்ணெளி பெற்று வந்தாயோ?
நிலவு தமிழின் குளிரினிமை
நினைவில் கொணர நீயிங்கே
உலவி வரவும் பெற்ருயோ?
உண்மை அறியேம்! உரையாயோ?

இனிமை சான்ற இசைக்கவிதை
எங்க ளின்பத் தமிழ்க்கவியின்
புனித மாய புகழ்மொழிக்குப்
பொன்னுல கொழித்துப் போந்தாயோ?
கனிவு கொண்ட தாயுள்ளின்
கரையில் பிள்ளைப் பாசத்தை
வினவிக் கேட்க வழியின்றி
விளக்க நீயும் வந்தாயோ?

வானம் என்னும் புற்றரையில்
வண்ணக் கார்மறி மந்தையினை
ஈன மாக மேயவிட்டே
எங்கோ நின்ற இடைமகனே!
ஆன சின்னப் பொழுதினிலே
அதுவும் சென்று மறைந்ததுவே!
போன இடமும் அறிவாயோ?
புலவர் புகழும் பெரியோயே!

---

## 19. மின்மினி

மழைஇ ரவினிலே - தாரகை
மங்கியே போயிடவே
ஒழிக்க மையிருளை - இயற்கை
உதவும் நல்விளக்கோ?

இரவுக் கன்னியுமே - கூந்தலில்
இணைத்தி ருந்தமலர்
விரைவில் சென்றதினுல் - எங்குமே
வீழ்ந்து சிதறினவோ?

கங்குல் முந்தியிலே - மின்மினி
களித்தே யாடிடுமே!
மங்கி மின்னுவதும் - நம்மையே
மயங்க வைத்திடவோ?

உயிர்கள் உள்ளத்தில் - காதல்
உணர்வை ஏற்றிடவே
புயலும் கொண்டுவந்த - வானப்
பொன்னெளி முத்துகளோ?

மின்னல் வில்லினையே - வருணன்
வலிந்து தாக்கியதால்
பொன்செய் முத்தெனவே - உதிர்ந்திவை
பூமியில் சிந்தினவோ?

மந்த மாருதம் - இதனை
 மண்ணுக்கும் விண்ணுக்குமாய்
விந்தையில் தாலாட்டி - நல்ல
 வேடிக்கை பண்ணிடுமே!

புதிய ஆசைகள் - உள்ளத்தில்
 பூத்து நிலவியதால்
குதியைக் கொண்டதுவோ? - உணர்ச்சிக்
 கோட்டையைத் தாண்டியதோ?

ஏழைய ரொன்ருக - இருந்தே
 இசைந்து வாழ்வதுபோல்
தோழமை கொண்டேதான் - இவையும்
 சுற்றி நிலவிடுமே!

இருளால் மூடியுள்ள - குடிசையுள்
 ஏழையைச் சுற்றுவதால்
அருளை நல்கிடுமோ - இதுவும்
 அன்பினைக் கொட்டிடுமோ?

---

## 20. நிலவும் தென்றலும்

அந்திக் கன்னி அவலத் தோய்வில்
அழிந்து மாயவே - குளிர்
இந்து நிலவை எங்கும் சிதறி
எழிலில் வந்ததே!

வாச மலரை வருடித் தென்றல்
வந்து பாய்ந்ததே - நல்ல
நேச மாக நிலவு மிதுவும்
நிகழ்த்தும் பேச்சினை,

*நிலவு*

என்னைப் போல இதத்தை நல்கும்
இயல்பைப் பெற்றயோ? - இந்த
புன்மை உலகைப் புதிய அழகில்
பொருந்த வைப்பேனே!

*தென்றல்*

புதிய அழகில் பொலியும் உலகம்
பொருந்தி இருக்குமோ? - காலை
உதயம் வரவே உனது காந்தி
ஓடிச் செல்லுமே!

*நிலவு*

உலக உயிர்கள் உள்ளில் காதல்
ஊற வைப்பேனே! - வாழ்வில்
நலிவைப் போக்கி நாடும் மகிழ்வை
நயந்த ளிப்பேனே!

தென்றல்

ஊறுங் காத லுற்ற உயிர்கள்
ஒன்று திருந்திடில் - மேனி
நீருய்ப் போக நிறைக்கும் வெம்மை
நீட்டுந் துயரையே!

நிலவு

வசந்தம் பதுங்கி வாழ வைக்கும்
வன்மை பெற்றேனே - மலர்
இசைந்தி ருந்தே இன்பக் கனவை
எண்ண வைப்பேனே!

தென்றல்

வசந்தம் பதுங்கி மறைந்தி ருந்தும்
வாரா திருக்குமே? - என்றும்
இசைந்த முறையில் இன்பம் பாய்ச்ச
இயன்ற செய்வேனே!

எனது வன்மை இயம்ப நீயும்
இசைந்து கேட்பையோ? - இந்தப்
புனித மொழிகள் பொய்ம்மை இல்லை
பொறையில் கேட்பாயே!

அலுவல் செய்தே அலுத்த மக்கள்
அயர்வைப் போக்கவே - நல்ல
வலுவாய் வீசி வாட்டம் போக்கி
மகிழ்ச்சி ஈவேனே!

நோயில் வீழ்ந்து தீயும் உயிர்கள்
நோயைப் போக்கவே - அங்கு
மாய மாக வந்து தொண்டை
மலர்ந்து செய்குவன்,

காயும் கதிரில் சாயும் மலர்கள்
கானம் இசைக்கவே - எங்கும்
சாயும் தொழிலைத் தங்கிச் செய்வேன்
தருமம் தழைக்கவே!

மணத்தை வீசி மண்ணைச் சுற்றி
வந்த தொண்டிலே - நல்ல
குணத்தைப் பெருக்கல் கொள்கை யென்றெ
கொண்டு நடப்பேனே!

இன்பக் குழலில் இசையை ஏற்றி
இதயம் குளிரவே - ஏனைத்
துன்பம் மாய்ந்து தூய்மை கூட்டத்
துயரம் அகலுமே!

## 21. அலையின் கீதம்

காதல் வேண்டிக் கனைப்போமே!
களிப்பில் துள்ளிக் குதிப்போமே!
ஓதும் வாழ்க்கைப் பாட்டில்
உலக உண்மை உரைப்போமே!

காலைக் கதிரைச் சூடிடுவோம்!
கனக மாலை மதுவுண்போம்!
பாலைப் போன்ற வெண்ணிலவாம்
பட்டை யுடுத்தே நடமிடுவோம்!

ஆழிக் குமரி உள்ளத்தில்
அகன்று பெருகும் கற்பனைகள்
மூளும் நிலையைப் பெற்றிடவே
மோதி நாங்கள் வருவோமே!

கரையாம் கணவன் கவின்பெறவே
கடலாம் குமரி தந்துவிடும்
நிரையார் மணிகள் பவளங்கள்
நித்திலம் தினமும் கொடுப்போமே!

ஏழை ஏங்கி அழுதிட்ட
ஈனக் குரல்கள் ஒன்றுகிச்
சூழும் தொல்லை யுரைத்திடவே
தொண்டை கிழிய முழங்குவமே!

தென்றல் எம்மை வருடுங்கால்
சிந்தை எழுப்பும் ஆசையினுல்
குன்ரு வாழ்க்கைப் பூங்கொடியும்
குலுக்கும் பாச மலரினையே!

பாறையில் மோதிப் பாய்வதினுல்
பண்புக் காதல் தியாகத்தின்
சீரும் நன்கு தோன்றிடுமே!
சிந்தைத் தூய்மை விளங்கிடுமே!

துன்பப் பிறவி சூழ்நிலையைத்
தோன்றி நாங்கள் காட்டிடுவோம்!
இன்ப வாழ்வு நுரைமுத்தை
எடுத்தே எங்கும் சிதறிடுவோம்

---

## 22. இயற்கைப் பாடம்

காவில் மலர்ந்த பூவினையே
கண்ணே! நீயும் கண்டிடுவாய்!
நோவும் கவலும் நீக்கியது
நுவலும் மகிழ்வைப் பெற்றிடவே!

தேனும் கசக்க இசைசெப்பும்
சிறிய குயிலைப் பார்த்திடுவாய்!
ஈனக் கவலையை மாற்றுகின்ற
இயல்பை நமக்கிது காட்டிடுமே!

வாட்டம் இன்றித் திரிகின்ற
வண்டை நீயும் நோக்கிடுவாய்!
நாட்டம் தொழிலில் வைத்திடவே
நம்மை யதுவும் தூண்டிடுமே!

பிறந்த இடத்தை எய்திடவே
துள்ளித் துடிக்கும் சிறுமீனும்
சிறந்த தேச பக்தியினைச்
செவ்வை யாகக் காட்டிடுமே!

தாவி முன்னே செல்கின்ற
தண்ணீர் நதியும் போக்கினிலே
யாரும் வாழ்வில் முன்னேற்றம்
எய்தும் எண்ணம் தந்திடுமே!

உன்னைச் சூழ்ந்த இயற்கையினை
ஊன்றி நன்கு நோக்குவையேல்
இன்னும் பலவாம் பாடத்தை
எளிதில் நீயும் கற்பாயே!

இக்கவிதைகள் இந்திக் கவிதைகளின் கருத்தைத் தழுவியன.

# 23. மழை

வானக் குளிரடி பட்டுவந்தேன் - வெண்மை
வார்குழ லாகவே நீண்டுவந்தேன்
கானச் சுவையினைப் பெய்துவந்தேன் - பெருங்
காற்றுட னேகலப் பாகிவந்தேன்.

மாமலை தட்டிச் சிதறிவந்தேன் - இந்த
மாநிலங் கண்டு மகிழவந்தேன்.
பாமலர் கட்டும் புலவர்கூட்டம் - நல்ல
பாமாலை கட்டப் படிந்துவந்தேன்.

காமரு சோலை களிக்கவந்தேன் - எழில்
காடுகள் நற்கவி னுகவந்தேன்
மாமலை மேடும் கடந்துவந்தேன் - நீண்ட
மாநதி யாகவே ஓடிவந்தேன்.

சோலைக் குயில்கள் மகிழ்வுபெற - நெடுஞ்
சோதி மயக்கி இருண்டுவந்தேன்
நீலக் குளக்கரைத் தேரையெல்லாம் - குரல்
நீட்டிப் புலம்பிடக் கேட்டுவந்தேன்.

இடியினெடு மின்னல் கொண்டுவந்தேன் - அந்த
ஏழை உழவன் மகிழவந்தேன்
படியும் நிலம்குளி ராகவந்தேன் - கொடும்
பாலை நிலப்பசி போக்கிவந்தேன்.

வாச மலரை மணந்துவந்தேன் - அந்த
வல்லிக் கொடிப்பூ சிதறவந்தேன்
நேசக் கிளைஞர் பலரிடையே - வாழ்வின்
நேர்மைப் பயனை வினவிவந்தேன்.

---

## 24. வசந்தம்

வான்மழை சொரிந்தது; வாவிகள் நிரம்பின;
வசந்தத் தேவி இன்கொலு விருந்தனள்.
கான்தளிர் பெய்தது, காவுகள் பூத்தன;
காலத் தேவன் கவினைக் கொட்டினன்.

வையம் செழித்தது; வரட்சி யகன்றது;
வளமை யெங்கும் வந்து நிறைந்தது.
பைம்புல் தளிர்த்தது; பசுக்கள் மேய்ந்தே
பாலைச் சுரந்தன பண்ணை நிலத்தில்.

தீங்கனி உதிர்த்தது தேம்படு சோலை;
தெண்ணீ ரூற்றுத் திறந்து சுரந்தது;
பூங்கொடி யசைந்து புனல்முத் துதிர்த்தது;
பொன்பொடி வீசின புதுமடல் தாழைகள்.

பொய்கைத் தாமரை புன்னகை பூத்தது;
புதுத்தேன் உண்டு பொன்வண் டார்த்தது,
வெய்யோன் செல்லா விங்கிருட் கிளையிலும்
விருந்துகள் கண்டன இன்னிசைப் புள்ளினம்.

இன்பம் பொங்குக! இன்பம் பொங்குக!
என்று குயில்கள் இன்னிசை மீட்டின.
துன்பம் செல்லுக! என்ற மொழிகள்
சொக்கச் சொன்னது சுந்தர அஞ்சுகம்.

தென்றல் கன்னி சிறுக நடந்தனள்;
தேனும் புனலொடு திருந்திக் கலந்தது
மன்றல் நிறைந்தது; மாபெரும் வயலும்
மகிழ்ச்சியைக் காட்டி இளநடம் புரிந்தது.

இடையச் சிறுவன் இயற்கை எழிலில்
இன்னிசைக் கீதம் விண்மிசை விட்டனன்
தடையும் ஓடையின் தணுத்த நீரால்
கேட்டது வெங்கும் தமிழின் உயிரொலி.

வானக வீதியில் வருமதி கண்டதும்
வனிதை யரெல்லாம் பெருமகிழ் வுற்றே
ஊனமில் செந்தமிழ் உயர்வினைப் பாடினர்
உயிரில் துடிப்பை ஊட்டிடும் வண்ணம்.

தொழிலில் முனைந்தனர்; தூய்மை கண்டனர்
தொன்மை நிலையை உன்னி யுணர்ந்தே.
இழிவைப் போக்க ஈட்டம் கொண்டனர்,
இன்ன லொழிக்கக் கங்கணம் கட்டினர்.

அழகின் குவியல்; அழகின் பெருக்குடன்
ஆனந்த நடனம்; அன்பின் சுரப்பு
பொழியும் வசந்தம் பூமியில் பெற்றே
புகழைக் கொண்டது பொன்விளை பாரதம்.

---

## 25. இசைக் குமரி

காலையிலே விரிபூவில் கனிந்த தேனுண்
களிவண்டின் பண்ணொலியில் கலந்து நிற்பாள்!
சோலையிலே காதல்மது சுவைக்க நல்கித்
துடிப்பேற்றும் பூங்குயிலின் தொண்டை யானுள்
மாலையிலே மல்லிகையின் மலர்ச்சி கண்டு
வருடுமிளந் தென்றலுடன் மருவிச் செல்வாள்
கோலஞ்சேர் முகிலுடனே குதித்துத் தாவி
கும்மாளம் கொட்டிடுவாள் இசையாம் தேவி!

திரைக்கரத்தால் முத்துகளைத் தினமும் வீசிச்
சேவிக்கும் கடலோடு சிரித்து நிற்பாள்
கரவாத வளம்பாய்ச்சிக் கருணை சிந்தும்
கன்னிநதி தோளணைத்துக் களிகள் கொள்வாள்
உரையாடுந் தேனருவி உயிரில் கூடி
உருவேற்றும் பாடத்தில் ஒன்றி நிற்பாள்
சுரந்துவரும் பெருமழையின் தொனியில், வாவித்
தொட்டிலிலே குதிதேரை சுரம்நிற் பாளே!

மயிலினது நல்லகவல்; மந்திப் பேச்சு;
மரமிடையே கிளிசெப்பும் மழலைச் செல்வம்;
புயலாகப் பாலளிக்கும் புனித ஆக்கள்
பொன்கன்றைக் தேடுகின்ற அன்ப ழைப்பு;
வெயிலொதுங்கும் ஆயர்குலச் சிறுவர் காற்றில்
விடுகின்ற தெம்மாங்கு; காலைச் சேவல்
உயரொலியும் இசைக்குமரி உள்ளம் பொங்கி
உருவாக்கும் தேனன்றோ? நடன மன்றோ?

சிறுமதலை நடக்குங்கால் கேட்கும் சப்தம்;
செப்புகின்ற தேன்மழலை; சிறுகைப் பாணி;
உறுப்பழகு மிஞ்சவரும் வனிதை நல்லாள்
ஒழுக்குகின்ற அமுதமொழி; உருக்கும் கீதம்;

பொறுப்புடைய நடைநல்கும் சிலம்புச் சப்தம்;
பொன்மேனி யசையவிரல் மீட்டும் வீணை;
சிறப்புடைய கருவிகளின் நாத மெல்லாம்
சிங்காரி இசைவாணி சேர்க்கை யன்றோ?

மின்னெறிந்து சுடர்வீசி மேலும் கீழும்
மிதக்கின்ற வானப்புள் மீட்டும் கீதம்;
சின்னவொரு வேய்ங்குழலின் துவார மூடு
செல்கின்ற காற்றெழுந்து செய்யும் வேலை
அன்னைமார் தாலாட்டும் ஆர்வப் பாட்டோ(டு)
அழுகின்ற ஒப்பாரி, அரவந் தன்னில்,
கன்னிமார் நாற்றுநடும் களைப்பில், பேச்சில்
கால்வைத்தாள் இசைக்குமரி கலந்து நின்றாள்!

அமுதத்தின் சுவைநல்கி அறிவு நல்கி
அகிலத்தார் கண்டுதொழும் ஆண்மை தந்த
எமதன்னைத் தமிழரசி இதயம் காட்டும்
இன்றமிழ்ச்சொல் கவிவாணர் இயற்றும் பாட்டில்
குமைகின்ற வாழ்வுதனில் குதூக லத்தைக்
கொட்டுகின்ற நாட்டியத்தில், கூத்து தன்னில்
அமைந்துநின்றாள் கதிரொளியில் சூடு போல
ஆர்த்திட்டாள் நாதத்தாய் வாழ்வு கண்டாள்!

நெஞ்சத்தில் பெருங்கவலை நிறையும் போதும்,
நினைவென்னும் நெருப்பெய்தி நீற்றும் போதும்,
வஞ்சத்தார் செய்கையினில் மயங்கும் போதும்,
வாழ்வினிலே பேரிடர்கள் வருத்தும் போதும்,
மிஞ்சுகின்ற கல்நெஞ்ச வெறியின் போதும்,
மேதினியைத் துறப்பதற்கு மேவும் போதும்
தஞ்சத்தைத் தந்தெம்மைக் காக்குந் தாயே!
சரணடைந்தேன் என்னுயிரில் தங்கி வாழ்க!

---

## 26. சுவர்க்க இன்பம்

காலைப் பொழுதினிலே - கிழக்கில்
கண்டிடு தங்க ஓவியமும்
வேலைப் புனல்மீது - கதிரோன்
வீசிடும் விண்ணின் சுடர்மணியும்
சோலைக் குயில்கூட்டம் - தேனின்
சொட்டெனக் கொட்டிடும் இன்னிசையும்
கோலச் சிரிகாட்டும் - மலரின்
கொத்தும் சுவர்க்க இன்பமடா!

தாமரைச் செவ்விதழில் - கவினில்
தங்கிடும் பனித்துளி குலுங்கிடவும்
ஓமெனும் இசைகூட்டி - சுகந்த
உயர்பரி மேல்வருந் தீந்தென்றல்
காமுறப் பண்ணிசைக்கும் - வண்டின்
கானம் தந்திடு நல்மயக்கம்
தோமெனும் ஓசையுடன் -மேகம்
சுற்றெழில் சுவர்க்க இன்பமடா!

பொன்னொளி விரிமாலை - அந்திப்
புட்களின் கலகல நாதமுடன்
மின்னொளித் தாரகையும் - வானில்
மிதந்திடும் பாலொளிக் குளிர்மதியும்
இன்னுணர் வூட்டுகின்ற - சோலை
இளந்தளிர்ப் பசுமையும், கனிக்குலையும்
கன்னி இருட்செறிவும் - அமைதிக்
காலமும் சுவர்க்க இன்பமடா!

கற்பனைக் கவிதைகளும் - மதுரக்
    கண்டை மிஞ்சிடும் சுவைப்பாட்டும்
அற்புதக் குழலிசையும் - வீணை
    ஆர்த்திடும் இன்னொலித் தெள்ளமுதும்
சிற்ப நற்றிருக்கலையும் - அழகு
    சிந்திடும் ஓவிய இன்னுருவும்
பற்பல ஆடல்களும் - நாவின்
    பயிற்சியும் சுவர்க்க இன்பமடா!

காதலி கொஞ்சுதலும் - அன்னை
    காட்டுநல் லன்பும் உயர்பணியும்
தீதொழி திருத்தந்தை - சோதரர்
    செய்திடும் சேவைகள் உயரெண்ணம்
சோதிச் சுடர்வீசும் - குழவியின்
    சொக்கிடு முகமும், கனிமொழியும்
கோதில் சிறுநடையும் - இன்பக்
    கூத்தும் சுவர்க்க இன்பமடா!

———

# 27. குமரித் துறை

பாரதத்தாய் பாதமெனப் பலரும் போற்றும்
பண்ணூர்க்கும் குமரிமுனைப் பக்க மெல்லாம்
நேரான பாறைகளின் வரிசை காணும்
நெஞ்சுறையும் திருத்தாயின் நகங்க ளொத்தே!
ஓராட்டித் தாலாட்டி உயர்ந்து பாய்ந்தே
உத்தமிக்குக் கடலளிக்கும் வணக்கம் கோடி.
பாராட்டித் திரைக்கரத்தால் பாதம் சேர்க்கும்
பவளங்கள் முத்தினுக்குக் கணக்கு முண்டோ?

கடல்நிரப்பை வான்விளிம்பு தழுவிக் கட்டிக்
கதிரொளியாம் சுடர்மாலை கனிந்து நல்க,
நெடுங்கடலும் குதிகொள்ளும்; நிலைமை மாறி
நெஞ்சகத்தில் சுதந்திரத்தின் நினைவைப் பெற்ற
திடங்கொண்ட வீரரைப்போல், செகத்தி லின்பச்
செந்தமிழின் உயர்வைப்போல், சிறப்பை எய்தும்
தடங்கண்ணாய்! சிறுவரெனத் தாவித் தாவி
தரளத்தை ஒதுக்கிவரும் தரங்கம் பாராய்!

செங்கதிரோன் கடலிருந்து மேக மென்னும்
சீர்ப்பளிங்கை வானகத்தில் சேர்த்து நின்றான்;
அங்கெழிலில் நடம்புரியும் அந்திக் கன்னி
அதன்மீது சுடரேற்றி வர்ணந் தீட்டிப்
பங்கமிலா சிற்பங்கள்; மாடி இல்லம்
பற்பலவாம் எழிலுருவம் ரதங்கள் செய்தே
இங்கிந்தக் கடல்சிரித்து மகிழ்ந்து துள்ள
இங்கிதமாய்க் காட்டுகின்ற விந்தை என்னே!

அந்தியிலே கதிர்வீழும் அழகுக் காட்சி
அரியபல கற்பனைகள், உணர்ச்சி நல்கும்;
சுந்தரப்பொன் குட்த்தினையே தாழ்த்தல் போல,
சுடர்த்தீபம் அமிழ்த்திட்வே யணைதல் போல,
சிந்தையிலே கருணையிலார் செல்வம் போல,
தேய்ந்துவரும் தொழிலாளி ஆசை போல,
விந்தையிலே சதிசெய்வார் வீழ்ச்சி போல,
விரைவாக மறைந்ததுவே! வியப்பைத் தந்தே!

அன்னைமார் உயிர்மகவை வாச நீரால்
அன்பாக நீராட்டும் அழகை யொத்தே
மின்னியெழும் குளிர்மதியும் நிலவைக் கொட்டி
விரிமணலார் தேரியினை, பாறை தன்னை,
புன்னைமரச் சோலையினைத், தாழங் காட்டைப்
புனிதநீ ராட்டுகின்ற புதுமை காண்பாய்!
என்னென்பேன் கடலெல்லாம் வைர வெள்ளம்!
இமைமூடித் துயில்பவளே! எழுந்து வாராய்!

வெறிகொண்டேன் நிலவென்னும் மதுவை யுண்டே
விளையாட்டில் புகுந்திட்டேன், செயல்ம றந்தேன்!
எறிகின்ற நுரைமாலை யெடுத்து வீசி
எழிலரசி சன்னதியின் முன்பே வந்தேன்
நறுமணத்தைத் தாங்கிவரும் தென்றல் வந்து
நற்கதையை, இன்கனவை, காதல் பண்ணை
அறிவமுதைத் தந்தெனக்கே அப்பால் செல்லும்
அகிலத்தில் பெரும்பேற்றை அடைந்திட் டேனே!

——::——

# 28. தமிழகம்

பொன்னைக் குவித்தது; மணியை நிறைத்தது;
புனிதத் தமிழகம் கணக்கின்றி-ஆனுல்
இன்னல் மிகுந்திட ஏங்கிய தின்றே
இதற்கென் காரணம் சொல்லுவீரே!

தானியம் கொழித்தது; தந்தது சுவைக்கனி
தாரணி பசியைத் தீர்த்திடவே-பதிலாய்ச்
சூனிய வயிருய்ச் சோர்ந்து நலிந்து
தொல்லை யுழப்பதைக் காண்போமே!

கலையைப் பெற்றது; காவியம் செய்தது;
கல்வியை உயிராய்க் கண்டதுவே-இன்று
நலிவைக் கொண்டே ஞான மிழந்தே
நாணம் துறந்திது வாழ்ந்திடுமே!

உழைப்பில் நின்றே ஊதியம் சேர்த்தது
ஊக்க மலையின் துணையாலே-பயனுய்
அழிவைப் பெற்றே ஆண்மை யிழந்தே
ஆவி குலைந்திது நின்றதுவே!

எண்ணுத லுயர்வே, இயற்றுதல் நலமே
இதத்தைப் பல்வழி நல்கிடினும்-இந்த
மண்ணில் சுதந்திர மாண்பை இழந்தே
வாடும் காரணம் கண்டோமே!

வேறு

ஆயிரம் ஜாதியும், அத்தனை மதமும்
தூய பெண்ணின் உரிமை கவர்ந்து
சிறைபடு புள்ளாய்த் தீமையி லாண்டதும்,
கறைபடு குலமாய்க் கருதிக் கருதி
மக்களைப் பிரித்து மடமை செய்ததும்,
பக்க உறவை மாய்த்து நின்றதும்,
கடவுளை எண்ணிக் கடமை மறந்ததும்,
அடலினைத் துறந்தே அயர்வு கொண்டதும்,
உலகப் பற்றை உதறிச் சென்றதும்,
நலிய உழைப்போர் நலத்தைப் பறித்ததும்,
தொழிலார் மீது முதலார் ஆட்சியும்,
அழிக்கும் பழக்கம் வழக்க மானதும்,
பிறரின் சூழ்ச்சியில் மயங்கி நின்றதும்,
குறையை ஒழிக்கும் குறியை இழந்ததும்,

சிந்தனைத் திறனைத் தேய விட்டதும்,
இந்த விதமாய் இன்னலை நல்கிப்
பிறரின் ஆட்சியில் பிணைய வைத்ததே!
நிறைந்த வாழ்வும், கொழிக்கும் செல்வமும்,
வரண்டு போயின, வறுமையே இதனுல்.

ஆதலின்

வீரத் தமிழரே! விரைந்தே எழுமின்!
நீர்மையைக் கொள்ளுக! நாச நெறியினை
உதறி மாய்க்குக! உங்களைப் பற்றியே

சிதைக்கும் பழமையைத் தீரமாய்த் தள்ளுக!
அன்புப் பொய்கை அகத்தில் தோற்றி
"இன்ப உறவில் யாவரும் சோதவர்,
வேற்றுமை இல்லை; வீழ்ச்சி இல்லை;
கூற்றெனும் சாதிக் கொடுமை களில்லை;
ஏழைய ரில்லை; இரப்பவ ரில்லை;
கோழைய ரில்லை; குந்துவோ ரில்லை;
யாவரும் ஒன்றே, எம்மவர் நலங்கள்
யாவினும் பொதுமையே!" என்ற முரசை
எங்கும் முழக்குக! இன்னலகள் மாயும்
பொங்குமே வாழ்வு, பொங்குமே இன்பம்.

---

## 29. தமிழ்க் கொடி

செந்தமிழர் திருக்கொடியைச்
    சேர்ந்து காப்போமே-எங்கள்
முந்தையரின் உயர்வவெல்லாம்
    முற்றும் காண்போமே!

நீதியுடன் நேர்மையினை
    நீணிலம் பெறவே-நல்கிச்
சோதியினை வீசுகின்ற
    சுந்தரக் கொடியாம்!

புகழென்னும் கம்பமதில்
    பூத்தே யாடுமே-தீய
இகழ்வென்னும் இகல்பனியை
    இளக்கி யோட்டுமே!

நாகரிக உச்சத்தை
    நன்கு காட்டிடும்-செல்வப்
போகத்தில் உலகப்பசி
    போக்கி நின்றதே!

கலையினது சிகரத்தில்
    கறங்கி யாடிடும்-கல்வி
மலையினையே நல்கியெங்கள்
    மாண்பு கூட்டிடும்

தனியரசு சக்தியினைத்
தழைக்க வைத்ததே-உள்ளில்
புனிதத்தைத் தருஞானப்
பொய்கை தோற்றிற்றே!

உடலினிலே இரத்தத்தின்
ஓட்டமுள்ளவரை-நாங்கள்
திடமாக எங்கொடியைச்
சேர்ந்து காப்போமே!

---

## 30. கொடிப் பாடல்

கொடிஉய ருகவென்று கூத்திடுவோம்.
குவலயம் கண்டிதை வாழ்த்திடவே
துடிப்பினைக் கொண்டனர் தொண்டரெலாம்
சோர்வினை நீக்கிக் கூடினரே!

அன்னையைப் பெற்றவள் ஆர்வத்தை
அணையா நெருப்பென வளர்த்திடுவோம்!
இன்னவள் ஜீவன் இருப்பிடமாய்
இலங்கும் கொடியை ஏற்றிடுவோம்!

திமுதிமு வெள்ளமாய் உணர்வெல்லாம்
சேர்ந்தது வெற்றியின் ஆசையிலே
அமுத மழையென ஒன்றுண்டேல்
அதுவே இங்கு பெய்வதுகாண்!

சுதந்திர யுத்த பூமியிலே
கொட்டும் முரசின் ஒலியினிலே
அதிர்ச்சி கொண்டனர் பகைவரெலாம்
ஆண்மை வளர்ந்த(து) எம்முள்ளே!

வீரர் கடமையை விளக்குவதும்
வீழ்ந்தோர் நிலையை உணர்த்துவதும்
சீர்மிகு கொடியின் பறப்பேகாண்!
தீரமாய்க் கொடியைக் காப்போம் நாம்,

எம்மவர் உரிமையை எவரேனும்
இனியும் கொள்ளை கொள்ளுவரேல்
பம்முதல் விட்டுக் கொடுங்காற்ருய்ப்
பறந்தே யதனைக் கைக்கொள்வோம்!

எங்கள் ஆசையின் சின்னமெனும்
எங்கள் ஆவியின் மானமெனும்
தங்கும் இக்கொடி தரணிக்கே
சாற்றும் பெருக்க நீதியையே!

கொடிஉய ருகவென் றிசைத்துக்
கூத்திடு வோம்செயலி லார்த்திடுவோம்!
அடிமையும் மிடிமையும் ஆழ்த்திடுவோம்!
அனைவரும் சமமாய் வாழ்ந்திடுவோம்!

---

## 31. விவேகானந்தர்

பாரதத்தின் வேதாந்தப் பதியில் வந்து
பாரெல்லாம் ஒளியீந்த பரிதி யன்னேய்!
ஒருகின்ற சமயத்தின் உண்மை காட்டி
உயர்ஞான வாழ்வினையே உணர்த்தி நின்ருய்!
தேருகின்ற மதியளித்தாய்! செம்மை யீந்தாய்!
திருநாட்டின் மாண்பெல்லாம் தெரிய வைத்தாய்!
சேருகின்ற வருள்கொண்ட விவேகா னந்தச்
செம்மலே! நின்செந்நெறியைப் பற்றி நின்ருேம்!

யோகமெனும் கடல்மூழ்கி யொழுக்க முத்தை
உண்மையினிற் கண்டெடுத்தே உலகுக் கீந்தாய்!
சோகமெலாம் தருகின்ற சோர்வை மாற்றிச்
சுத்தான்மக் கீதத்தின் சுருதி மீட்டிப்
போகமெனும் பேயொழிந்தாய்! பொய்ம்மை நீத்தாய்!
போற்றுகின்ற கடமையெலாம் புரிய வைத்தாய்!
ஆருகின்ற கருமத்தின் அரிய பாதை
அடைவித்த அருங்குருவே! வாழ்க! வாழ்க!!

அன்பென்னும் பூந்தென்றல் அகில மெங்கும்
ஆக்கமுடன் வீசிவிடின் அதுவே இன்பம்;
துன்பத்தைத் தருகின்ற பயத்தைக் கொல்லின்
தூய்மையெலாம் வந்தெய்தும்; வீரஞ் சேரும்;
வன்மத்தை வெளியாக்கும் வாதம் போக்கில்
வருத்துகின்ற பகையெல்லாம் வலுவில் ஓடும்
என்றுரைத்த எம்பெருமான் இதயங் கண்டே
இவ்வுலகில் ஏற்றமெல்லாம் எய்தி வாழ்வோம்!

---

## 32. அண்ணல் வாழ்க!

இருட்டினிலே குமைகின்ற உயிரின் கூட்டம்
இன்படைய வந்துதவும் இரவி போன்று
குருடர்களாய்ச் செயல்மறந்து வறுமை மிஞ்சிக்
கொள்கையிலா வாழ்வினையே இந்த நாட்டார்
மருவிநின்ற வேளையிலே வந்து தோன்றி
வாழ்வுதந்த மோஹனரே! இதய வாழ்வே!
அருவியெனப் பெருகிவரும் அன்பால் வையம்
அத்தனைக்கும் வழியிந்தாய் அறிவீந் தாயே!

வாக்கினிலே உண்மையொளி வளர்க்கும் அண்ணல்;
வற்ருத பெருங்கருணை மகிழ்வுச் செல்வன்;
போக்கினிலே நேர்மையெனும் புனிதங் காண்போன்;
பொறுமையெனும் இமயமலை; அன்புக் கங்கை;
தேக்கமெலாம் அறிவமுதம்; திண்மை நெஞ்சச்
சித்தாந்த நிதிகொழிக்கும் செல்வ வள்ளல்;
ஆக்கத்தைப் பெற்றிடவே உணர்ச்சி நல்கி
ஆண்மையினைத் தந்துவிழி திறத்தல் கண்டோம்!

இந்தியர்கள் தளைநீங்கி இருள கற்றி
இடரெல்லாம் களைந்தின்ப உரிமை காண,
மந்திரம்போல் கதிநல்கும் கல்வி தந்தாய்!
மருட்சியினுல், இயலாத தன்மை யாலே,
தந்திரமாய் மன்னித்தே னென்றல் அச்சம்
சக்தியினுல் சகித்திடுதல் வீர மென்ருய்!
யந்திரங்கள் கண்டஞ்ச அஹிம்சா யுத்தம்
ஈந்தவனே! பாரதத்தின் பண்பு தந்தோய்!

தொழிலாளர் வாழ்வெய்த, இந்து முஸ்லீம்
தொடர்புற்று நாட்டினது மானம் காக்க,
அழிப்பிக்கும் வறுமையினை வெட்டி வீழ்த்த,
அமுதீயும் குடிசைவளர் பணியைப் போற்ற,
உழைப்பெல்லாம் பயனுக்கி ஊற்றும் எண்ணம்
உரமாக்கி உடலெல்லாம் வற்ற நின்று
வழிகாட்டும் மகாத்மனே! நீ வாழ்க என்றும்!
வையத்தை உய்வித்து வாழ்க! வாழ்க!!

---

## 33. சோவியத்துக்கு கவியரசியின் வாழ்த்து

இந்த நாட்டின் தலைவ ரெல்லாம்
இன்ன லெய்திச் சிறையில் வாழ,
முந்து முணர்வு ருசிய மக்காள்!
முனைந்து வாழ்த்தங் கனுப்ப இயலார்!
நொந்த நிலைபோய் வெற்றியி லாங்கே
தோன்றும் இருபத் தாரும் ஆண்டில்
சிந்தை மகிழ்ந்தே இந்தியர் சார்பில்
சிறக்க வாழ்த்தை யனுப்பு கின்றேன்!

மனித வர்க்கம் முன்னே றுகின்ற
மாண்புச் சரிதம் தன்னி லிந்தப்
புனிதக் கால்நூற் றுண்டுப் பொழுது
பொருந்தி நாடி துடிக்கும் நொடியாம்!
வினைக ளாற்றி வியப்பு மிஞ்ச
விளங்கும் வெற்றிப் பயனை யெல்லாம்
நினைவி லேற்றிப் பெருமை யோடு
நிறைம கிழ்வில் புதுமை கொள்வோம்!

எதிர்கா லவாழ்வை இயக்கும் கர்த்தா
'யாமே' யென்ன எண்ணி நீவிர்
புதிய ஊக்கம் உறுதி யாலே
புனிதக் கண்ணீர் பொழிந்து ரத்தம்
குதிக்க விட்டே செய்த தியாகம்
கொடிய ஏகா திபத்யம் தன்னை
மிதித்தே நொறுக்கித் துகள்க ளாக்க
மலர்ந்த ததிலே குடியி னுட்சி!

பழுது கொண்ட வண்டி யென்ன,
பான்மை யிழந்த விவசா யிகூட்டம்
முழுவ னுக்கும் சக்தி யீந்து
வெற்றித் திக்கு விரைய விட்டே
அழைக்கும் சுதந்திர மண்ட லத்தை
அணுக விட்டீர்! ஆண்மை யற்றே
புழுதி மலராய் மிதிபெற் றோரைப்
புனித வீர ராக்கி நின்றீர்!

இவர்க ளின்று வையந் தன்னில்
இன்ப சுதந்திரம் நாக ரீகம்
இவற்றை யெல்லாம் காக்க வேண்டி
எதிர்த்து நின்றே போரா டுகின்றார்!
நவையில் சுதந்திர வாழ்வு வேண்டி
நாளும் துடிக்கும் எமக்கும் பிறர்க்கும்
அமையும் சான்று நீங்க ளானீர்!
அகத்தில் மகிழ்ச்சி ஒளிபி றக்கும்!

———

சோவியத் புரட்சியின் 26 வது ஆண்டு விழாவின் போது கவிக்கோகிலம் சரோஜனியார் அனுப்பிய வாழ்த்துச் செய்தி.

## 34. வாடும் அந்த வங்கமலர்கள்

திரிநன்கு விளக்குக்கே உழைக்கு மாபோல்
    தேசத்துக் குழைத்திட்ட வீர மைந்தர்
விரிவாய தியாகத்தை வங்கம் தன்னில்
    விளைத்ததினுல் இன்றடைந்த வீழ்ச்சி யென்னே!
தெரியாத, இருள்கவிந்த சிறையைப் பெற்ருர்!
    தீராத கொடுமையினுல் சிறுமை யுற்ருர்!
பிரியாத உயிரினராய்ப் பாரி லின்று
    பெருந்துன்பில் வதைபட்டு வாழ்கின் ருரே!

சிறையினிலே ஒளியில்லை; சேர்காற் றில்லை;
    சிறிதளவு நல்லிடங்கண் ணயர இல்லை;
கறியுடனே உணவினையே காலம் காலம்
    கருத்துடனே கொடுப்பாரும் காண்ட லில்லை;
அறிவூட்டும் பத்திரிகை, அரிய நூற்கள்
    அருந்துயரைப் போக்கிடவே அளிப்பா ரில்லை;
வெறிகொண்ட விலங்கொத்துச் சிறையைக் காப்போர்
    வேதனையைப் பெற்றிவர்கள் வாடு வாரே!

மழைக்காலம் சிறையினிலே நிரம்பும் வெள்ளம்;
    மட்டில்லா நச்சுயிர்கள் வந்து தோன்றும்:
அழையாதே தேள்பாம்பின் ஆர்ந்த கூட்டம்
    அடைக்கலமாய் வந்திங்கு குடியைக் கொள்ளும்
வழுவாதே பெருநோய்கள் வந்து வந்து
    வாட்டமுற இங்கிவரை வருத்திச் செல்லும்
நுழையாத துன்பமெல்லாம் நுழைந்த திங்கே
    நுவன்றுவிடல் எளியவொரு செய்கை யாமோ?

சிறைக்கதவுக் குள்ளொடுங்கும் செம்மை வீரர்
சீர்கெட்டுச் சோர்வுற்றுச் செம்மை குன்றி
கறையில்லா வாசமலர் கனலின் காய்வரல்
கரிவெய்திப் பொலிவிழந்த கதியைப் பெற்றே
நிறைவாய அன்புத்தாய், நிகரில் தந்தை
நீங்காத உடன்பிறப்பு, பெண்டிர், பிள்ளை
குறையாத வளங்கொண்ட தாயகத்தைக்
குறித்தழுது தினமுருகிக் குன்று வாரே!

வங்கமக்கள் சிறையினிலே வாடி வாடி
வடித்துவிட்ட கண்ணீரில் கலந்த மூச்சும்
இங்குவந்து நம்மவரை எழுப்பி விட்டே
இதயத்தைப் புண்ணுக்கி எரியை ஊட்டும்
பொங்கிவரும் துன்பவெள்ளம் போக்கி மூந்தே
போற்றுகின்ற நல்வாழ்வின் புனிதம் போக்கும்;
கங்குகரை இல்லாஇக் கடுத்த துன்பைக்
கல்லிவிடல் நம்மவர்தங் கட்மை யன்றோ?

பொன்னென்றில்சேர் பாரதத்தின் புனித மக்காள்!
பொறுமைமிகும் இவ்வங்க வீரத் தோழர்
தன்னலனுல் சிறைசென்று தவிக்க வில்லை;
தான்பிறந்த நாட்டின்னல் தவிர்க்கச் சென்றார்
இன்னவரும் பாரதத்தார், இதையே எண்ணி
இப்பொழுதே மீட்டிவரின் இன்னல் போக்க
உன்னிவந்தே உள்ளத்தில் உணர்ச்சி பொங்க
ஒப்பற்ற கிளர்ச்சியினை ஊக்கு வீரே!

வங்கக் கைதிகள் சிறையில் வாடி வதங்கியகாலை (1936-ல்) எழுதிய பாடல்கள்.

# 35. வறுமையில் மாயும் உயிர்கள்

வையகத்தில் நிகரில்லா வளமை நாடு
வானமுதம் வழங்குகின்ற தேச மென்றே
பொய்மையில்லா நிலைமையினைப் புகழப் பெற்ற
பூமியிதில் மக்களின்று பசியால் வாடி
வெய்துயிர்த்தே பழுதழுது கண்ணீர் வற்றி
விடுமூச்சில் சோர்வுற்றே மயங்கி வீழ்ந்து
நையலுற்றே சாவுகின்ற நிலையைக் கண்டு
நாமிங்கு கண்மூடல் நலமோ காண்பீர்?

வங்கத்தில் வளமிலையோ? வற்றுக் கங்கை
வரண்டதுவோ? வானமெங்கும் கொடுநோய்க் காற்றே?
அங்குமக்கள் படுந்துயரம் கேட்டுக் கேட்டே
அடிவயிறு துடிதுடிக்க உள்ளஞ் சோரும்!
தங்களது பிள்ளையர்கள், தாய்மா ரெல்லாம்
தாவியெரி அக்கினியில் பூவாய் மாய்வார்
சங்கைமிகும் அரசாங்கம் இதனைக் கண்டே
தக்கவண்ணம் உதவிதனைச் செய்தல் வேண்டும்!

உடலினிலே ஓரங்கம் ஊறு பெற்றால்
உடனடியாய் மற்றுறுப்பங் குதவல் போல
திடமழிந்த வங்கத்தின் நிலையைக் கண்டே
தேசத்தார் நல்முயற்சி செய்தல் வேண்டும்
படுநோய்க்கு மருந்தினையே நல்க வேண்டும்
பசியினையே போக்கிவிட உணவு வேண்டும்!
கடமைகளுள் ஈதிங்கு முதன்மை யாகும்,
கருணையுடன் மக்களிது விரைந்து செய்வீர்!

## 36. சிறப்பற்றவை

தன்மனம்போல் வாழுகின்ற கிளியைக் கூண்டில்
தங்கவிட்டுப் பாலுடனே பழமும் நல்கி
இன்மொழிகள் பலசொல்லி எடுத்துக் கொஞ்சி
இதமெல்லாம் காட்டிடுவர்; ஏழை யங்கே
கன்மனமும் கரைந்திடவே மெலிந்து வாடிக்
கைநீட்டிப் பிச்சையெனக் கதறிக் கேட்டால்
புன்மொழியால் கேலிசெய்து துரத்து கின்ற
புனிதமிலாத் தனவந்தர் புத்தி யென்னே!

கோயிலென்றும், குளமென்றும், தீர்த்த மென்றும்
குதித்தெழுவார், பணமெல்லாம் கொட்டி நிற்பார்
வாயிலிலே தொழிலாளி வியர்வை யோடு
வாய்புதைத்துக் கூலியினைக் கேட்டு நின்றால்
'ஓய்வில்லை பின்வருக' என்று ரைப்பார்,
ஒட்டுகின்ற வயிறுடனே கந்தை கட்டி
ஆயிரமாய்க் குழந்தையிங்கு பசிக்குக் கெஞ்ச
அத்தனையும் விரட்டிடுவார் அகமு மென்னே!

எழுகின்ற தீப்பசியை மாற்றிக் கொள்ள
இரவுபகல் இரத்தத்தை வியர்வை யாக்கி
உழைக்கின்ற தொழிலாளி உலகின் ஜீவன்
ஓங்கிவரும் செல்வத்தின் கர்த்தா; வையம்
தொழவேண்டும் பெருநிலையான்; மன்னர் மன்னன்;
தூயஇவை எண்ணாதே அவரைத் துன்பால்
அழுத்தியன்னார் வாழ்வெல்லாம் அழித்து நிற்கும்
அன்பில்லா முதலாளி செய்கை யென்னே!

தன்பலத்தில் நம்பிக்கை யில்லா மக்கள்;
தம்மையே தாழ்த்திமிகச் சிறுமை யாக
இன்னொருவ ரிடங்காட்டும் இயல்பு பெற்றோர்;
இலட்சியமே இல்லாத வாழ்க்கை கொண்டோர்;
சின்னவொரு காரியத்தை எண்ணி யெண்ணித்
திட்டமழிந்தே கோழையராய்ச் சிதைந்து நிற்போர்;
இன்னவரால் நாட்டுக்கே இன்னல் மிஞ்சும்
இவர்களிடத் தறியாமை இருந்த தென்னே!

நாட்டிற்கு நாசத்தை நாளுஞ் செய்து
நல்லுறவை எந்நாளும் கெடுத்து நின்று
கூட்டிற்குள் அடைபட்ட பறவை நோக்கிக்
கூட்டினது மாண்புரைக்கும் வேடன் போல,
வாட்டத்தில் நையுந்தன் இனத்தார் நோக்கி
வந்தபிற அரசாங்க வரிசை செப்பி
ஆட்டுகின்ற தனைநன்கு வலுக்க வைத்தே
ஆனந்தம் எய்துபவர் அறிவு மென்னே!

———

## 37. நாட்டுக் கல்வி

நாட்டினது சரிதத்தை நன்கு கற்று
நம்முன்னோர் மனப்பண்பை யறிய வேண்டும்;
கோட்டமனப் பான்மைதந்தே யறிவை மாய்த்துக்
குருடாக்கும் பழங்கதைக ளொழிய வேண்டும்;
வீட்டினிலும் வெளியினிலும் அறிவைத் தூண்டி
விதவிதமாய்ப் புத்தகங்கள் விளங்க வேண்டும்
தீட்டுகின்ற பாடத்தில் தேச பக்தி
செழிப்படையும் வகையெல்லாம் செய்தல் வேண்டும்

தாய்மொழியில் நன்றாகப் பயிற்சி வேண்டும்;
சகமெல்லாம் அதன்வளமை பரப்ப வேண்டும்;
பாய்கின்ற கலைப்பெருக்கு, பாரி லுள்ள
பற்பலவாம் அம்சமிதில் பரவ வேண்டும்
ஓய்வில்லா உணர்ச்சியினை ஊட்டுங் கல்வி,
உலையாத மனத்திண்மை, உறுதி, வீரம்
ஆய்கின்ற நல்லியல்பும் பிறவும் நன்றாய்
அளிக்கின்ற கல்வியினை அறிய வேண்டும்.

உடலினையே வலுவாக்கக் கல்வி வேண்டும்;
ஊக்கத்தைப் பெருக்கிடவே பாடம் வேண்டும்;
அடல்கொண்ட முந்தையோர் அன்பு, வண்மை
அடக்கத்தின் பெருநிலையை எய்த வேண்டும்;
நொடிநொடியில் புதுமையினைக் காணு மாற்றல்,
நுட்பமிகும் விஞ்ஞானப் பயிற்சி வேண்டும்.
திடங்கொண்டே நம்நாட்டைக் காத்து நிற்கச்
சிறப்புடைய போர்முறைகள் பயிலல் வேண்டும்.

தன்னுழைப்பால் தான்வாழும் வாழ்க்கை யன்றித்
தந்திரத்தால், சோம்பலினல் தன்மை மாறி
இன்னெருவர் முகம்நோக்கி இரந்து நிற்றல்
இழிவாகும், வெறுப்பூட்டும் செயலே யாகும்,
வன்மையினல் சக்தியினு லடக்கி யாளும்
மனப்பான்மை மிகக்கேடாம், நஞ்சை யொக்கும்,
இன்னவற்றை யொழிக்கின்ற கல்வி வேண்டும்;
இதமுண்டு, வாழ்க்கையிலே இன்பங் காண்போம்!

தனியொருவன் தொழிலாள னுகும் வித்தை
தவருமல் எந்நாளும் கற்க வேண்டும்;
இனியொருவன் முதலாளி யென்று கூறி
இடர்நல்க வருநிலைக்கு நாணங் கொள்ளும்
புனிதமிகும் கல்வியினைப் போற்ற வேண்டும்;
பொன்குவிய, வளங்கொழிக்க யாரும் ஓர்நல்
இனத்தவராய் வாழ்ந்திடவே இயக்கும் கல்வி
இந்நாட்டில் எங்கெங்கும் பெருக வேண்டும்.

---

## 38. தொழிலாளர் பிரலாபம்

மாநிலத்தில் எம்மைப்போல்
வருந்துபவர் யாரையோ?
ஊனுழைத்தும் வாழ்க்கையிலே
ஒருபயனும் கண்டிலமே!

உடலில்வள முண்டோயெம்
முள்ளத்தில் திட்முண்டோ?
நடையினிலே மிடுக்கினையே
நாங்களிங்கு பெற்றதுண்டோ?

இளமையின் வலுவோடெம்
மிரத்தத்தின் கொழுப்பெல்லாம்
தளராதே உழைப்பினுக்குத்
தக்கபலி யாக்கினோமே!

உழுதுநிலம் பயிராக்கி
ஒப்பற்ற மேனிகண்டும்
விழுவதுயாம் பட்டினியில்
வெறும்பஞ்சம் நோய்த்தொல்லை!

தோட்டப்பயிர் செய்வதிலே
சுவைமிக்க கனிபழுக்கும்;
நாட்டமதில் எமக்கிருக்க
நலம்பெறுதல் பிறராமே!

நாள்முழுதும் நெய்தேயாம்
நல்லுடையச் செய்திடினும்
தோள்முண்டுக் கலைந்திடுவோம்!
தொத்துவது கந்தையினை!

உள்ளத்தில் பூத்துதிரும்
உயர்வாழ்வின் ஆசையெலாம்
மெள்ளமெள்ள மாய்வதல்லால்
மெய்யாகப் பார்ப்போமோ?

காலைமுதல் இரவுவரைக்
கடுந்தொழிலைச் செய்தாலும்
கூலியெனக் கிடைப்பதுவும்
கூழுக்கும் கண்டிடுமோ?

தினமுழைத்துத் தனவந்தர்
செல்வத்தைப் பெருக்கிடினும்
மனமுவந்து சிறுகூலி
மாளவெனத் தருவாரே!

கூலிமிகக் குறைவென்றால்
குதித்தெழுவார் முதல்பேரர்
ஓலையினை விட்டிடுவார்
உடனடியாய் வெளியேற!

யாம்பெற்ற இன்மதலை
இசையாத உணவாலே
சாகும்நிலை எய்திடுமே!
தரித்திரத்தி லழுந்திடுமே!

இருட்டுமிகும் குடிசையிலே
இடரென்னும் பேய்க்கூட்டம்
விரட்டிடுமே நிதமெம்மை
வேதனையைத் தந்திடுமே!

எம்மின்னல் என்றொழியும்?
எமக்கின்பம் என்றுவரும்?
செம்மைமிகும் திருவாழ்வைச்
செகத்திலென்று பெற்றிடுவோம்!

---

## 39. பெண்மக்கள்

அன்பும் அடக்கமும் அமைதியும் பெற்றதால்
இன்பப் பெண்ணுக் கின்னல் உரியதோ?
வாழ்வில் இவரின் உரிமை கவர்ந்ததால்
தாழ்ந்தது தேசம், சமூகம் கெட்டதே!
அடிமைத் தளையால் அல்லற் பட்டோம்;
உடமைகள் யாவும் ஒன்ருய் இழந்தோம்;
ஒய்ந்த துணர்ச்சி; மாய்ந்தது புலமை;
சாய்ந்தது வெற்றி; தீய்ந்த தறிவே!

கல்வி யுடையாள் கசடனைச் சேர்வதும்,
மெல்லிய லழகியை முரடனில் தள்ளலும்,
பொருந்துவ தாமோ? பொருந்த வைக்க
நெருங்கும் தரகர் நெடுந்தொகை யாவர்
தொல்லை தந்திடும் சோதிடர் சாதகம்
நல்ல பணம்பெற நவில்வதும் உண்டாம்!
கல்லும் மலரும் மென்மையி லொன்ருே?
நல்லொளி முத்து நாடுமோ இரும்பை?

கன்னியைக் கிழவன் மணந்து நிற்பான்;
பின்னர் கிழவனே வைய மிழப்பான்;
இளமை வாயிலை எட்டி நோக்கும்
ஒளிமிகு கன்னி உலக இன்பைத்
துறக்க வேண்டுமாம்! தூய ஒழுங்கிதாம்!
பிறக்கும் உணர்ச்சியும் அழகும் இன்பமும்
கனவிலும் வருத்தக் கலங்கிவள் வாடுவள்;
புனைவன யாவும் கவர்ந்திடத் துடிப்பாள்!

இளமையில் திருமணம் இயற்றி வைத்ததில்
வளமை குன்றி வாடினர் பெண்கள்;
விதவா விவாகம் விரும்பா திருந்ததில்
சிதைந்தது நீதி; ஒழுக்கம் தேய்ந்தது;
வெள்ளுடை கட்டிக் கூந்தலை மாய்த்திடில்
உள்ளில் கிளம்பும் உணர்ச்சியும் மாயுமோ?
மலரின் மணமும், மதுரத் தென்றலும்,
நிலவின் தணுப்பும், நெஞ்சை விடுமோ?

வீரராய் இன்று விளங்கினர் பெண்கள்;
விடுதலை எய்திட் விரைந்து வந்தனர்
ஒரும் கல்வியும், உயரிய கலையும்,
ஊன்றிக் கற்றுத் தாயகம் காக்க
தேர்ச்சியைக் கண்டனர்; தீமைப் பிசாசைத்
திட்மாய் எற்றிச் சிதைத்து நின்றனர்;
நேர்மையும் மாண்பும் நிறையப் பெற்றனர்
நீணிலம் கண்டிதை வாழ்த்துதல் பாரீர்!

---

## 40 சுதந்திரம்

ஆற்றோரம் சோலையிலே அரும்பு பொட்டி
அகங்களிக்கக் குதித்துவரும் வாச மேற்றுக்
காற்றோட்டம் உதிர்க்கின்ற கனிக ளுண்டு
கவல்மறந்து ப்றவைதருங் கானங் கேட்டுத்
தோற்றுகின்ற அழகென்னும் மதுவை யுண்டுச்
சொக்குகின்ற வேளையினில் காற்று வந்தே
'ஏற்றமில்லா மகனே!நீ அடிமை' என்க
இன்பமெல்லாம் மாய்ந்ததுவே! இன்னல் பெற்றேன்

பொன்னாலே வீடுதனைச் செய்து தந்து
புரிமுத்து மணியெல்லாம் நிறைத்தே யங்கு
மின்னுகின்ற ரத்தினங்கள், வைரக் கற்கள்,
மேலான உணவுவகை, தானி யங்கள்;
உன்னுகின்ற கலைஞர்களின் சேர்க்கை; காதல்
ஊற்றெடுக்கும் எழில்வாழ்வு; கவிதைச் செல்வம்
இன்னவைகள் இருந்தும்யான் அடிமை யென்றால்
இவையெல்லாம் பாழன்றோ? இன்ப முண்டோ?

என்னாட்டின் உரிமையினை எண்ணி யெண்ணி
ஏங்குகின்றேன்; எய்திடவே துடிது டித்தேன்;
இன்னலினை, வறுமையினை, நோய்கள் தன்னை
இதற்காக ஏற்றிட்டேன், இன்பங் கண்டேன்,
உன்னுகின்ற அன்புத்தாய், குழந்தை உற்றார்
உறவெல்லாம் பலியீந்தேன், ரத்த மீந்தேன்
இன்னுணர்வுச் சுதந்திரத்தைப் பெற்று நிற்பேன்,
இல்லையேல் உயிரீவேன்! வாழ்வு வேண்டேன்!

## 41. சுதந்திரப் பேறு

சுதந்திரப் பேறடைய வேண்டும் - நாட்டின்
துன்ப நிலையிதுவால் போகும்.
இதந்தரு வானப்புய லாகும் - வாழ்வில்
இன்ப மழைபொழியச் செய்யும்.

இல்லறக் கோவிலொளி எய்தும் - மனம்
என்னும் கடல்மகிழ்வில் பொங்கும்
கல்லும் உணர்ச்சியிதால் கொள்ளும் - பிணம்
கண்ணைத் திறந்து நடம்புரியும்

கல்வி பெருகவழி காட்டும் - ஞானக்
கலையாம் நதிப்பெருக்கைக் கூட்டும்
செல்வ மலையெழும்பச் செய்யும் - உலகில்
சிறக்கும் வலிமையினைப் பெய்யும்.

பட்டினிப் பஞ்சமொழிந் தேகும் - இது
பண்பைப் பெருக்கிமானங் கூட்டும்
ஒட்டியி ருக்குமுற வாக்கும் - மக்கள்
ஒன்றும் எனுமறிவை ஊட்டும்.

இன்பச் சுதந்திரத்தை இழக்கில் - இங்கே
ஈன மிகுந்தநிலை யாகும்
அன்பு நலநெறியச் செய்யும் - இதை
யாரும் தகையமனங் கொள்ளோம்!

ஆழி எழுப்புகின்ற திரையை - யார்க்கும்
அதட்டி நிறுத்திவிட லெளிதோ?
வீழும் அருவிகொண்ட நதியை - என்றும்
விரட்டித் திருப்பிவிடல் விணே!

வானைத் தழுவியோடும் முகில்கள் - எவர்
வன்மைக் கடிபணிந்து செல்லும்?
கானில் மறைந்துறையும் மிருகம் - எவர்
கட்டுக் கிசைந்துநிலை கொள்ளும்?

இன்னல் சகித்துமிதைக் கொள்வோம் - உயிர்
ஈந்தும் இதன்நிலையைக் காப்போம்
பொன்னும் மணிக்குமிதை விற்கோம் - இந்தப்
புவியில் மனிதரென வாழ்வோம்!

---

## 42. அழைப்பு

நீண்ட உறக்கம் நீங்கி யெழுந்து
நிமிர்ந்து நின்றது நமது நாடு.
தீண்டு மயர்ச்சி மட்மை களெல்லாம்
சிதறி மாய்ந்தது செகத்தோர் வியக்க!

இதயக் கதவை யாரோ தட்டி
எம்மவர் கடமையை இயம்பின ரின்னே
சிதைந்த நரம்பும் எலும்பும் குருதியும்
செழித்த திதனுல் திடத்தைப் பெற்றே!

அழிந்த சக்தியில், ஆண்மையில் வலுவில்
அடங்கா உணர்ச்சி யறிவு நல்மரம்
எழுந்த திங்கே இன்பம் நல்கிட
ஏழ்மையைத் தின்றே ஏப்பம் விட்டிட!

ஆண்மக் கள்நாம் அடிமை களல்ல,
அன்புத் தாயகம் பிறருக் கல்ல,
வீண்வம் பியற்றி விருதுகள் நாட்டல்
வீணர் செயலென வீழ்த்திட வந்தோம்!

எம்மவர் நாடிங் கெமக்கே உரிமை
எதிர்ப்பு களிங்கே இற்றதைக் கண்டோம்
செம்மை யினுதயம் தெரியப் பெற்றேம்
சீர்த்திகள் யாவும் சிறக்கக் கண்டோம்!

திரண்டது செங்கடல்; செங்கதி ரெழுச்சி
தீமைப் படலம் தீய வந்தது.
அரற்றுது நற்புயல் அல்லலை மாய்க்க,
அவற்றின் வேகம் அடக்கவும் கூடுமோ?

எழுங்கள் பாரத இளஞ்சிங் கங்காள்!
இளமை எய்தினள் இன்பத் திருத்தாய்!
அழைத்தே அரியணை யமர்த்த நீங்கள்
ஆவியைத் துறந்தும் ஆவன செய்க!



## 43. நவபாரதம்

உதித்து வந்தனன் உரிமைச் சூரியன்
உலைந்த பாரதம் கண்டிடவே
மிதித்தே யெம்மை வருத்தி நின்ற
மேகங்கள் சென்று மறைந்தனவே!

வீரம் பிறந்தது; வாய்மை சிறந்தது;
வீழ்த்தும் தீயச்சம் ஒழிந்ததுவே!
சூரம் அமையத் துடிப்பை எய்தினம்
சூழ்ச்சிகள் யாவும் அழிந்ததுவே!

சாதிகள் மாய்ந்தன; சண்டைக ளோய்ந்தன;
சமரச ஞானம் பிறந்ததுவே!
தீது புரியும் தெவ்வர்கள் மாய்ந்தனர்
தீரமும் எம்மில் விரைந்ததுவே!

ஒற்றுமை காணவே ஊக்கம் பிறந்திட்
உள்ளத் திலன்பு நிறைந்ததுவே!
வெற்றுப் பகைமைகள் விட்டுப் பிரிந்தன
வெம்மைக் கொடுமைகள் மாய்ந்தனவே!

பெண்ணை யடிமைப் படுத்தும் வழக்கப்
பேயுமே இங்கு மறைந்ததுவே!
கண்ணிலே மண்ணை அள்ளியே தூவும்
கசடர் செய்கையும் தீய்ந்ததுவே!

நீதிகள் வந்தன; நேர்மைகள் தோன்றின;
நீணிலம் கண்டு வியந்திடவே
சூதுகள் மாய்ந்தன; வாதுகள் தீர்ந்தன;
சுதந்திர மிங்கு துலங்கியதே!

கலைகள் வந்தன; காவியம் வந்தது
கண்ட தொழிலெலாம் வந்தனவே!
நலிவைப் போக்கும் நல்ல வளங்களும்
நம்மையே யிங்கு சூழ்ந்தனவே!

ஏழைகள் ஏக்கம் இன்னல் ஒழித்தனர்
இன்பத்தை யவரும் கண்டனரே!
வாழப் பிறப்பித்த பாரதத் தையவர்
வண்மை உலகாகக் கண்டனரே!

ஒரு தேசத் தொண்டன் நவ பாரதத்தைப் பற்றி எண்ணும் சிந்தனைகள்



முற்றும்.



நா சு, நாடகக் கலா நிதி

க கேசரி, நவாப்

ராஜமாணிக்கத்தின்

## மதுரை தேவி பால வினோத சங்கீத சபா

முகாம்: சித்திரா தியேட்டர், திருவனந்தபுரம்

**கலைமணங்கமழும் புதிய நாடகங்கள்:**

# ஐயப்பன்

# சக்திலீலா

**இன்பசாகரன் — ஏசுநாதர்**
**பிரபலச்சந்திரா — பிரேமகுமாரி**
(யாவும் உரிமை பெற்றன)

——— மற்றும் ———

**கிருஷ்ணலீலா, ராமதாஸ், ராமாயணம்**
**ஞானசவுந்தரி**

முதலான இன்னும் பல நாடகங்களும்
பு மகொண்டுள்ளன.

தெ நிலையம், நாகர்கோவில்.